ஓம் பரப்பிரம்மணே நம: **80-பக்கங்கள்.**

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்க, உற்சாகத்தைப் பெருக்கவல்லதான விகடமும்,
ஆநந்தகரமான அநுபவ விநோத ஞானகலா விலாஸங்களும்
நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள உயரிய மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—திரிசிரபுரம்-எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு.

"எண்ணிய எண்ணியாங் கெய்துப; எண்ணியார்
 திண்ணிய ராகப் பெறின்." (திருக்குறள்.) 



| | | |
|---|---|---|
| கமலம்-6. | சென்னை பிரஜோற்பத்தி௵ புரட்டாசி௴ 1உ | இதழ்-66. |
| Vol. 6. | 1931-ம் ௵ செப்டம்பர் ௴ 17உ | No. 66. |






**"நன்மை கடைப்பிடி"** இது ஔவையின் வாக்கியம். நன்மையான காரியங்களை மட்டும் நாம் கவனிப்போம். தீயவற்றை ஒதுக்கி விடுவோம். நல்லதைச் செய்தற்கே நமக்கு நாட்களில்லை. அந்த நல்லதையும் பிறகு செய்வோமென்கிற எண்ணத்தில் பல நாட்களை வீணாக்கி விடுகிறோம். இது போதாதென்று இன்னும் தீயவற்றிலெல்லாம் நுழைந்து நமது மனத்தை எண்ணற்ற சந்தேகங்களால் குழப்பிக்கொண்டு கெடுவதாயின், நமது ஜன்மமே வியர்த்தமாகும். ஏதேனும் ஒரு நற்காரியம் நன்மையைப் பயக்குமென்று தோன்றினால் அதைச் செய்தே தீரவேண்டும். நமக்கு முன்பு சென்று அநுபவித்து ஆநந்தம் கண்ட பெரியோர்களின் வழி நமக்கு எதிரே இருக்கிறது. அவ்வழியிற் சென்று பகவானை வணங்கித் துதித்து நமது பிறவிப்பிணியை அகற்றக்கடவோம். இடையே ஸந்தேகங்களைத் தோற்றுவிக்கிறவர்களுடைய சொற்களையும், நாஸ்திகம் பேசுவோரின் வாதங்களையும் நாம் கவனிக்க வேண்டாம். அவற்றால் நமது மனோ நிம்மதி கெடுவதைத் தவிர வேறு பயனில்லை. இந்தச் சூழ்ச்சிவலைகளில் நாம் சிக்காமல் தூர விலகி, எது நன்மையோ அதை நாடக்கடவோம். எது நமது மனத்தைச் சாந்தமும் சமாதானமுமான நிலையில் வைக்குமோ, எவரை நாம் துதிக்கையில் நம்மையே நாம் மறந்துவிடுகின்றோமோ, எந்த அநுபவ ஆநந்தம் இவ்வுலக இன்பங்களுக்கெல்லாம் மேலானதாகக் கொள்ளப்பட்டு,

அவ்விதமே மேலானதாகவுமிருந்து நமது உள்ளத்தைப் பரிசுத்தப் படுத்துகின்றதோ—அந்த ஆதிபரம்பொருளை நித்தியமும் காய மனோவாக்கால் ஸ்தோத்தரித்து உய்யக்கடவோம்.

ஃ

“சாஸ்திர சகவாசம்” சாஸ்திரமானது சுகத்தை யனுஸரித்தே ஏற்பட்டிருக்கின்றது. ஒவ்வொன்றுக்கும் ஒரு சாஸ்திரமுண்டு. காந்த விளக்குகள் ஏககாலத்தில் ஆயிரக்கணக்காய்க் கொளுத்தப் படுகின்றன; அதற்கும் ஒரு சாஸ்திரமுண்டு. சாஸ்திர ஆதாரத் தைப் பின்பற்றியே உலகம் செல்கின்றது. சாஸ்திரம் போதிக் கிற வழியிற் செல்வோன் நேரான பாதையில் நடப்போனுவான். நமது ஜன்மத்தை ஈடேற்றிக் கொள்வதற்கு மகான்கள் பலவித சாஸ்திரங்களையும்ஏற்படுத்திச் சென்றிருக்கின்றனர். அந்த சாஸ் திரங்களின் பொதுவான கருத்து சரீரம் அநித்திய மென்பதும், ஆத்மா நித்திய மென்பதுமே. எல்லா சாஸ்திரங்களும் இவ்வாறே கூறுகின்றன. உதாரணமாக, சரீரத்துக்கு சுகத்தைக் கொடுக்கத் தக்க புஷ்பம், சந்தனம் முதலியன சில நிமிஷங்களிருந்து பிறகு வாடிக் காய்ந்துபோகின்றன. மனோத்ஸாகத்தை விளைவிக்கும் கல்வி முதலியன எந்நாளு மிருக்கின்றன. சரீராநந்தத்துக் கேதுவான பொருள்களைப் பிறர் அபகரிக்கக் கூடும். மனதிற்காநந்தமான கல்வி யையும், தர்ம காரியங்களையும் மற்றவர் அபகரிக்க முடியாது. இத ஞல் ஆத்மாநந்தமானது அழிவற்றதென்றும், நித்திய மென்றும் ஊகிக்கிறோம். திருந்தாத தீய பிறவிக் குணத்தையும் ஆத்ம பலத் தால் மாற்றக்கூடும். அத்தனை சக்தியும் மகிமையும் ஆத்மாவுக்குண்டு. ஒவ்வொருவனும் சாஸ்திரங்களின் உட்கருத்தை யுணர்ந்து தன் வலிமையை யறிவானுயின், தன் இஷ்டப்படி மனதை யிருக்கச் செய்யலாம். உதாரணமாக, ஒரு நாள் காலை 10-மணிமுதல் இரவு 10-மணிவரை வேலை செய்ய வேண்டுமென்று ஓர் விரதம் கொண் டால் அந்தப்படி செய்தே தீரலாம். மனதை யடக்கியாள்வதற்கு சாஸ்திர ஞானம் நமக்கு உண்டாக வேண்டும். ஒரே தினத்தில் நமக்கு சாஸ்திர ஞானம் கிடைத்து விடாது. எதனையும் சிறுகச் சிறுகவே அப்பியஸிக்க வேண்டும். நமது சாஸ்திர தர்மங்களின் வழியே நாம் சென்று, நமது மனத்தை அடக்கி யாண்டு, ஆத்மாவுக்குள்ள நித் தியத்தை யுணர்ந்து, பகவானிடம் நமது சித்தத்தைச் செலுத்தி ஈசுவராநந்தத்தை யனுபவிக்கக்கடவோம்.

ஃ

“பொல்லாங்கென்பவை யெல்லாந்தவிர்” நமது மதத்தையும், சாஸ்திரங்களையும் அந்நிய மதஸ்தர்கள் பழிப்பதை நாம் கவனிக்

---

ஒருவனை வாழவைக்காமற் போனாலும், அவனைத் தாழவைக்காதே.

கத் தேவையில்லை. காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சு. நமது மதமே நமக்கு சிறந்தது. நம்மைப் பழிப்போர் தங்கள் கிணற்றில் நிறைந்துள்ள சேற்றை அறியாமல், மற்றவர்களின் கிணற்றுக்குக் குறை சொல்வோராவர். அவரவர் மதத்துக்குள்ளாகவே அந்த மதத்தைப் பழிக்கிறவர்களும் சிலர் உண்டு. இவர்களின் வார்த்தைக்கும் மதிப்பு தராதிருந்து விடுவதே உத்தமம். கண்டனம் செய்யப்படாத மதங்கள் உலகிலில்லை. அந்தக் கண்டனங்கட்கு ஏற்ற விடை சொல்லவும் அந்தந்த மதஸ்தர்களால் முடியவில்லை. தாங்கள் சொல்லும் விடை தங்கட்குச் சரியெனத் தோற்றுகிறதேயன்றி, மற்ற மதஸ்தர்களுக்கு அது சரியானதாகப்படவில்லை. சிலர் விடை கூறுவதற்குப் பதிலாகக் கண்மூடித்தனமாய் மற்ற மதஸ்தர்களை மனம் போனபடி நிந்திக்கத் தொடங்கி விடுவர். பின்னும் சிலர் மற்றவர் மதத்தைத் தாங்கள் தூஷிக்கலாமாம்; தங்கள் மதத்தைப் பற்றிமட்டும் பிறர் ஒரு நிந்தையும் சொல்லக் கூடாதென்பர். இவர்களெல்லாம் கல்யாணவீட்டில் கலகத்தைச்செய்யவந்தவர்களேயாவர். இவர்களை நாம் ஒதுக்கி விட்டு, நமது பிறவிப்பிணியை நீக்குவதான மங்கள காரியத்தில் சமாதானமாய் நமது சிந்தையைச் செலுத்திப் பகவானின் அருளை யடைவதாகிய வெற்றியைப் பெறுவோமாக.

ஃ

"காலமிருத்யு அபமிருத்யு" என்று இரண்டு மிருத்யுக்களுண்டு. கால மிருத்யுவை ஜெயிக்க யாராலுமாகாது அபமிருத்யு அணுகா வண்ணம் பகவானைத் தினந்தோறும் பஜிக்க வேண்டும். புத்திசாலித்தனமாய் நடக்கவேண்டும். ஜலத்திலமிழ்வதும், நெருப்பில் விழுவதும், இருட்டு வேளையிற் சென்று விஷ திருஷ்டியடைவதும் புத்திக் குறைவாலேயாதலின் அவை துர்மரணமாகும். ஜாதகரீதியாய் ஒருவனுக்கு 50-வயதென்று ஏற்பட்டிருக்க, அவன் 30-வயதிலேயே தற்கொலை செய்து கொள்வானாயின் அவனுக்கு அபமிருத்யு நேர்ந்ததென்கிறோம். இவ்விதம் துர்மரணமுற்றோன் மீதி 20-வருஷம் வரை பிசாசு ரூபமாக ஸஞ்சரிப்பானென்பர். இது ஒரு வகையாரின் கொள்கை. ஆதலின், அபமிருத்யு நிவாரணமாக ஒவ்வொருவரும் பிரதி தினமும் பரமேசுவரனைப் பிரார்த்திப்பது நன்று.

ஃ

"ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையும்?" என்று ஒரு பழமொழியுண்டு. சிறுபோதிலேயே ஈசுவர த்தியானம் செய்யாதவர்கள் வயது முதிர்ந்த பிறகு தெய்வபக்தர்களா யிருப்பதரிது. நன்கு கற்றிருந்தும் விபசார முதலியவற்றைச் செய்வோரும், பிறரை ஏமாற்

---

ஒருவர் நம்மிடம் சொன்ன விஷயத்திலிருந்து நாம் வேறொரு விதமாக அதை யூகித்திருப்பதை அவர் அறிய விடலாகாது.

றும் குணமுடையோரும், வஞ்சகநினைவு படைத்தோருமாகிய இன்னோரெல்லாம் இளமையில் தெய்வபக்தியுடன் கற்காதவரேயாவர். பகவத் பக்தியின்றி, தெய்வபயமின்றி எத்தனை நூல்களைக் கற்றாலும் பயனில்லை. தாம் செய்த துர்க்கிருத்தியங்கட்கெல்லாம் இரண்டு புஷ்பங்களைப் போட்டுக் கற்பூரம் கொளுத்தி வைத்து நிவர்த்தித்துக் கொள்ளலாமென்போர் கடவுளை ஏமாற்ற நினைக்கும் அறிவீனரேயாவார். பகவானைப் போற்றும்படியும், நல்லவழி தவறாதிருக்குமாறும் சிறு பிள்ளைகளுக்குப் போதிப்பது தான் பெற்றோர்களின் முதற் கடமையும் முதற் கல்வியுமாகும். மனதில் தெய்வ பயமிருந்தால் நேரானவழி தனக்குத்தானே தெரியும்; வஞ்சகம், அசத்தியம், ஏமாற்று யாவும் தொலையும். மனம் நிர்மலமான நிலையில் இருக்கும். கடவுளும் அந்தப் பரிசுத்த மனத்திடையே தோன்றுவார். காலமும் நல்லதாகும். எத்தகைய விபத்துகளும் ஒரு நிமிஷத்தில் விலகி நன்மையாய் முடியும். இவ்வளவுக்கும் மனதின் பரிசுத்தமே காரணம். அந்தப் பரிசுத்தத்தைச் சிறு வயதிலேயே ஊன்ற வைப்பது உத்தமம்.

ஃ

“எப்படி வைத்தாலும் நன்றே நின் கருணை” என்று, பகவான் நம்மை எந்த ஈன ஸ்திதியில் வைத்தாலும், அதுவும் அவரது கருணை யென்று ஆநந்தத்தோடிருக்கப் பழகுவதில் விசேஷித்த மனோ சாந்தமும் ஸுகமுமிருக்கிறது. சிலர் எவ்வளவு செல்வம் கூடியிருந்தும், அதில் திருப்தி கொள்ளாமல் மனச்சலிப்பெய்துவர். இவர்கள் எந்நாளும் துக்கிகளேயாவர். முற்காலத்தில் டில்லி சக்கரவர்த்தியிடம் ஓர் ஸமஸ்கிருத வித்வான் தினமும் போய்க் கொண்டிருந்தார். சக்கரவர்த்தி அவரை அபிமானித்து எத்தனையோ ஸம்பாஷணைகள் செய்வதுண்டாயினும், அவர் வெறுங்கையுடனேயே திரும்பி வருவது வழக்கம். ஒரு நாள் சக்கரவர்த்தி ஒரு பூசனிக்காயைக் கொடுத்து அனுப்பினர். வித்வான் துக்கத்துடன் அதைப் பெற்று வீட்டிற்கு வந்து, இது தானா சக்ரவர்த்தியின் பரிசு என்று வெறுத்து அதை உயரத் தூக்கித் தொப்பென்று போட்டு உடைத்தார். தக்ஷணமே அதற்குள்ளிருந்து கலகலவென்ற சத்தத்துடன் பொன் சவரன்கள் விழுந்தன. ஒளியும் பளபளப்பும் கண்களைப் பறித்துக் கொண்டு போயின. உடனே வித்வான் டில்லீசுவரனுடைய கிருபையை வியந்து ஆநந்தக் கூத்தாடினார். இதைப் போல் ஜெகதீசுவரன் அருளும் பொருள்களை யெல்லாம் பொறுமையோடேற்று அனுபவிப்போர் நற்பதவியை யடைவர். பட்டினியாய்ப் போட்டாலும், பாலும் அன்னமும் படைத்தாலும் ஈசுவரன் எப்

---

வாலிப வயதில் செய்யும் தீச்செயல்களின் பலன் அவ்வளவும் முதுமையில் கூடிக்கொள்கிறது. நாட்பட்ட ரோகங்களை நிவர்த்திக்க மருந்துகளாலும் ஆகிறதில்லை. நாட்பட்ட தீச்செயல்களுக்கு மன்னிப்புமில்லை.

போதும் நமக்கு நன்மையையே செய்து கொண்டிருக்கிறுரென் றெண்ணிப் பொறுமையோடும் உத்ஸாகத்தோடும் இருப்பவர்க்கு ஒரு நாளும் குறைவில்லை. பகவானளிக்கும் பொருள் அற்பமென்று நினைப்போர்க்கு உண்மையான சுகம் ஒருபோதும் உண்டாகாது. தனது காலக்ஷேபத்திற்கு இவ்வளவேனும் கிடைத்ததே யென்ற திருப்தியுடனிருந்து, உலகத்திலுள்ள பொருள்களெல்லாம் பகவத் ஸ்வரூபமென்றுணர்ந்து, தன்னுடைய ஆத்மாவே பிரம்மமென்று எண்ணி, தன்னைத்தான் அறிவோனே ஞானியாகிறுன். அவனுக் குத் தான் ஜீவன் முக்தி கிடைக்கும்.

ஃ

"தித்திப்பும் கசப்பும்" கற்கண்டைப் புசித்தவனுக்குத் தித்திப் பும், வேப்பங்காயைத் தின்றவனுக்குக் கசப்பும் தோன்றுவது போல, உலகில் என்றும் நல்லது செய்கிறவர்களுக்கு ஸுகமும், கெட்டது விளைப்போருக்குத் துக்கமும் ஏற்படவேண்டுமன்றே? ஆனல், சிலர் நல்லது செய்து கொண்டிருக்கினும் துக்கத்தையே அனுபவிக்கின்றதையும், சிலர் கெட்டதையே செய்து கொண்டிருக் கினும் ஸுகத்தையே அனுபவிக்கின்றதையும் காண்கின்றேம். ஜன்மாந்திரமில்லையென்றுல், இங்கு பிறந்த பின் இறக்கும் வரை யில் செய்யும் கர்மங்களின் பயனும் இந்த ஜன்மத்திலேயே அனுப விக்கப்பட்டுத் தீருகின்ற தென்பதாக ஏற்படுகின்றது. இப்பிறவியி லேயே செய்த கருமத்திற்குப் பயன் கிடைக்கு மென்றுல், தீமை செய்கின்றவனுக்கு ஸுகமும், நன்மை செய்கின்றவனுக்குத் துன்ப மும் வர நியாயம் இல்லையே? ஆதலின், பூர்வ ஜன்மத்திற் செய்த பாவ புண்யங்களின் பலனை இந்த ஜன்மத்தில் அனுபவிக்கின்றே மென்றும், இந்த ஜன்மத்திற் புரியும் பாவ புண்யங்களை இனி வரும் ஜன்மத்தில் அனுபவிக்க வேண்டுமென்றுமே ஏற்படுகின்றது. ஆத லின், ஜன்மாந்திரம் என்பதை ஒத்துக்கொள்ள வேண்டியதே என்க.

ஃ

"பகவத் ஸ்தோத்திரம்" ஒ! அன்புள்ள அப்பனே! அடியேமை நின் திருவுள்ளத்துக்கிசைந்த நன்னெறியிற் செல்லும்படி கடாக்ஷிப் பாய். பரமபதம் ஸாதிப்பது நின் அருளினலன்றே? ஐயனே! நாங்கள் மடமையாலும், அந்தகத் தன்மையாலும், சுவாபிமானத் தாலும், எம்மனேபீஷ்டப்படிக் கண்டபடி திரிந்து பலவித துன்பங் களை யடைகையில், நீ பிரியத்தால் தடுத்தும் அதை யறியாது

---

தமக்குக் குமாரன், மருமகள், பேரன் பேத்திகள் யாவும் இருந்தும், தமது வஞ்சக மோச குரோத புத்தியினல் அவர்களை அன்னியராகக் கருதித் தம்மை ஒண்டி மரமாய் நினைத்து, உள்ள இன்பத்தை அநுபவிக்கப் பிராப்த மின்றி ஆத்திர சிந்தையோடும் அல்லற்பட்டு அலங்கோல் மாகின்றனர்.

முஷ்காத்தோடு அதையே தொடர்ந்து நின்றோம். ஓ புத்திர வாத்சல்லியகா! எம்மை அவ்வாறான மயக்கங்களினின்றும் மீட்கக் கடைக்கணித்து, சுஞ்ஞான ஒளி யீந்து நன்னெறி புகட்டுவாய். நினது ஹஸ்தகமலங்கள் உதார கருணாரஸமாகிய அமிர்தத்தைச் சொரிந்து, தீய வழியில் அலைபட்ட எம் விடாய் தீர்த்து, நின் பாத நீழலில் சுகமே ஆநந்த நித்திரை புரிய அபயங் கொடுப்பனவாகுக! அந்தக் கர கமலங்களை யாங்கள் அன்புடன் அணைத்து முத்தமிட்டுக் கொள்வோமாக! ஓ நிர்ஹேதுக கருணாநிதீ! இந்த எமது வாழ்க்கை மரக்கலமானது அஞ்ஞானமாகிய பெருங்கடலில் காமாதி பகைவராகிய பயங்கரமான ஜலசரங்களால் தடுக்கப்பட்டு முழுகிப் போகாமலும், அகங்காராதி கடற் கொந்தளிப்புகளால் அபாயமுறாமலும், ஆசா பாசாதி சுழல்களி லழுந்தாமலும், ஞானதேஜஸாகிய சாதனத்தால் நன்கு பாலிக்கப்பட்டு, நின் திருவடிக்கரையடைந்து, அருளாநந்த நிலையிற் பேரின்பமுறச் செய்வாயாக. இன்றேல், அஞ்ஞான இருட் கடலில் திசைதப்பி மயங்கும் இத் தொண்டர்களுக்கு வேறு யார் துணை நின்று எங்ஙனம் கரையேற்றக் கூடும்?

ஃ

ஓ ஆபத் ரக்ஷகா! நின்னருள் விளக்கேயன்றி வேறு துணையேதுமில்லோம். உனது உதார ஹஸ்தகமலங்கள் எம்மை யணைத்துக் காக்காமல் அகன்றதை என்றும் கண்டோமில்லை. நாங்கள் ஏமாறி மோசம் போன இடத்திலும், வஞ்சகர்களை ஸர்வநாசம் செய்து, அவர்களின் கபடத்தினின்று தப்புவித்துக்கொள்ள சூக்ஷ்மமான வழிவைத்து எங்களை இரக்ஷித்திருக்கின்றாய். உமது கருணையையே நம்பி நாங்கள் உயிர் வாழ்கின்றோம். நாங்கள் முழுமையும் அசக்தரென்பதையும், வெகு சுலபத்தில் வஞ்சகவலையில் விழக் கூடியவர்களென்பதையும் எம்மைக் காட்டிலும் நீ நன்றாய் உணர்ந்திருக்கின்றனை. ஆகவே! எம் அப்பனே! நாங்கள் சிறிதும் அச்சமின்றி துன்மார்க்க மோசங்களி லுழலினும், அதினின்றும் மாற்றி அறிவூட்டி நல்வழிகாட்டிக் கடைத்தேறச் செய்யும் வன்மை உனக்கன்றி பின் யாருக்குண்டு? பரமபத வாஸனாகிய நீயே எமது பசியைத் தணிக்க வல்லவன். அருள் தாகங் கொண்டு அந்தகார வனாந்தரத்தில் அலையும் எமது விடாய் தீர்க்க கருணாநதிப் பிரவாகத்தைக் காட்டி, யாம் போகும் இடங்களிலெல்லாம் எம்மைப் பின் தொடர்ந்து எமது தாகம் தணியத் தேற்றுவாயாக. அதனால் நின் திவ்யமான பாதத்துவம் விகஸிப்பதாக. எம்மை யுமது பிரேமையால் கட்டி

---

ஒருவன் தன் சொத்துக்களை இன்னொருவரின் பேருக்கு மாற்றிச் சில காலம் வரையில் அவர்கள் வசமே வைத்திருக்க விரும்புகிறான். அப்படி ஒப்புக்கொண்டு, பிறகு அவன் பேருக்கே திருப்பிவிடக்கூடிய உத்தமர்கள் உறவினரிலும் நேசருள்ளும் இருக்கிறார்களாவென்று பார்த்ததில் எவரையும் நம்புவதற்குக் காணோமாம்!

யணைத்து, பிள்ளைக்குத் தந்தை உபகரிக்கும்விதமாக அனுக்கிரகித்து சத்திய மார்க்கம் காட்டிப் பரமஞானிகளடையும் சாசுவதாநந்த நிலையில் சாயுஜ்ஜிய பதவியை யருளிக் காப்பாயாக. ஓம் தத் ஸத்.

திருவே! என் செல்வமே! தேனே! வானோர்
செழுஞ்சுடரே! செழுஞ்சுடர்நற் சோதீ! மிக்க
உருவே! என் உறவே! என் ஊனே! ஊனின்
உள்ளமே! உள்ளத்தின் உள்ளே நின்ற
கருவே! என் கற்பகமே! கண்ணே! கண்ணில்
கருமணியே! மணியாடு பாவாய்! காவாய்!
அருவாய வல்வினை நோய் அடையா வண்ணம்
ஆவடுதண் துறை உறையும் அமர ரேறே!

## புது மனிதரின் சந்திப்பு.

இன்னார் நம்மைப்பற்றி மிகச் சொல்லியதின் பேரில் வந்ததாகத் தெரிவித்துக்கொண்டு அந்தப் புதிய மனிதர் பேச ஆரம்பிக்கிறார். அவருக்கு ஒரு கௌரவத்தைக் கொடுத்து நாமும் அவருடன் பேசுகிறோம். அவர் தம்மைப் பற்றிய சிலாக்கினைகளை விரிவாகக் கூறுகிறார். நமது மனதில் என்ன காரணமோ அவரைப்பற்றித் திருப்தியுள்ள அபிப்பிராயம் ஜனிப்பதில்லை. இடையே நமது காரியத்தைக்கூட அவர் நிறைவேற்றி வைப்பதாகச் சொல்லுகிறார். அந்த வகையில் அவரைச் சற்றே நம்புவதற்கு எண்ணமும் தோன்றுகிறது. பிறகு அவர் மறுபடியும் வருவதாகக் கூறி விடை பெற்றுச் செல்கிறார். நம்மை விழிப்புள்ள மனிதனென்று அவர் கண்டுகொண்டதால் பிறகு அவர் வருவதேயில்லை. நமது காரியத்தையும் அவர் நிறைவேற்றுவதில்லை. ஒரு மாதத்திற்குப் பிறகு அவரை ஓரிடத்தில் அகஸ்மீகமாகப் பார்க்கிறோம். அவர் நம்மை 'யறியாதது போல் இருந்துவிட, நாமும் அந்தத் தந்திரக்கார மனிதனை வெறுப்புடன் நோக்கி விட்டு ஒதுங்கிப்போய் விடுகிறோம். புது மனிதரின் சந்திப்பு இப்படியாக முடிகிறது. புத்திசாலி என்னும்போதே ஒரு சமயத்தில் கபடப் பூனையாக இருக்கலாமோவென்று அப்பொழுதே சந்தேகத்துடன் நினைக்கும்படியாவதும், அவ்விதமே அது முடிவதும் விநோதமே.




# ஒரு படி தவறியதின் முடிவு.


யிரம் எண்ணங்கள் மனதில் அடுத்தடுத்துத் தோன்றக்கூடும். "சிந்தையை யடக்கியே சும்மாயிருக்கிற திறம் அரிது." மனம் உள்ளவரை எண்ணங்களின் ஊற்றும் பெருகியே வரும். அவற்றில் எவையெவை நல்லெண்ணங்களென்றும், எவையெவை தீய எண்ணங்களென்றும் பகுத்தறிந்து தூர்த்த நினைவுகளை யகற்றி நற்சிந்தனைகளோடும் ஸன்மார்க்கமாகவேண்டும். ஒருவன் எப்படி நினைக்கிறானோ அப்படியே ஆகிறான். தனது எண்ணங்களுக்கேற்ப அவனவன் ஒவ்வொரு உருவத்தை யடைகிறான். எந்த எண்ணம் ஸதாகாலமும் மனத்தில் ஊடாடிக் கொண்டிருக்கின்றதோ, அந்த எண்ணத்தின் வழியே மனிதனும் செல்லுகின்றான்; அந்த எண்ணத்திற்கே அவன் வசமாகி அடிமைப்படுகின்றான். உலகின்கண் நிகழும் நல்லன—அல்லனவான காரியங்கள் அனைத்தும் முதன் முதலில் மனத்திடையே தோன்றிச் சஞ்சரித்த எண்ணங்களினின்றும் உற்பவித்தவைகளே யாகும். எண்ணங்களின் ஒரு தனி முடிவே செய்கை. எந்தச் செய்கையும் மனத்தில் ஊன்றிப் பல காலம் கூடியிருந்து பின் நேர்ந்தவைகளேயாகும். ஒரு சொல்லுடன் மற்றொரு சொல் கூடுவது போன்றும், ஒரு காசுடன் இன்னொரு காசு சேருவது போன்றும், காசுகளைக் காலணாவாக்குவது போன்றும், முதலில் ஓர் நினைவு மனத்தில் உண்டாக, அது ஒரு சிறு புள்ளியளவினதாகவே இருக்க, அது நாளடைவில் விருத்திகொண்டு பல புள்ளிகளாகிப் பெருகி, சின்னஞ்சிறியதா யிருந்த நினைவைப் பேரெண்ணமாக வளர்த்து, அதற்கான வலிவும் தந்து, புஷ்டிக்கச் செய்து, அந்த எண்ணத்தின் வண்ணமே அதற்கிசைந்த செயலிலும் துணிவு கொண்டு விடுமாறு தூண்டி விடுகின்றது. இங்ஙனம் எழுந்த எண்ணங்கள் உத்தமமானவையாயின், அவ்வெண்ணங்களைக் கொண்டவனின் காலமும் நன்மையானது தான். ஆயினும்,

---

வைத்தியரின் மருந்துகள் விற்பனையாகாவிடில், ஏமாந்தவனைப் பார்த்து எல்லா மருந்துகளையும் வாங்கும்படி சொல்வது வைத்தியரின் லக்ஷணமாம்.

உலக அநுபவத்தில் துஷ்ட சகவாசத்திற்குக் கிடைக்கிற இஷ்டர்கள் போல் நற்சகவாசத்திற்கு நல்லோர்கள் அகப்படுவதில்லை. அவ்விதமே, மனத்தின்கண் உற்பவிக்கும் நினைவுகளில் உத்தமமானவைகள் மிகச் சொற்பமேயாக, அதமமும்—அக்கிரமமும்—சோர்வும்-வீழ்ச்சியுமான எண்ணங்களே அபரிமிதமாகப் பெருக்கெடுத்துச் செல்லுகின்றன. மனிதன் இத்திய நினைவுகளின் வழியே சிக்கிக்கொள்வானாயின், அவன் பின்னர் மீட்சிபெறுவது கூடாமையாகி, அத்தவறினையே பலகாலும் தொடர்ந்து புரிந்து பாழ்படுகின்றான். துரியோதனன் பாண்டவரிடத்துச் சிறுபருவ விளையாடலிற் காட்டிய சிறு விரோதமே—நாளடைவிற் பெருகிப் பாரதயுத்தமாய் முடிந்தது. ஒரு படி தவறியவன் பல படிகளையும் தவறிக் கீழே விழுந்து கெட்டழிய நேர்கின்றது. இதுவே உலகில் என்றும் காணும் நிலை.

ஃ

உள் சாவகாசம், வெளி சாவகாசம் என்று சாவகாசம் இருவகையானது. ஒரு காரியத்தை நிதானமாகச்செய்து முடிப்பதற்குப் போதிய நேரமிருப்பதே வெளிச் சாவகாசமாகும். மனதை ஒரு நிதானத்தில் நிறுத்தி ஆழ்ந்து யோசனை செய்து எண்ணங்கள் பல தோன்றி அவற்றை வெளியிடும் ஆற்றலுக்கு அவசியமானதே உள் சாவகாசமெனலாம். உள் சாவகாசத்தில் நன்கு தீர்மானித்து ஒரு முடிவுக்கு வந்ததை வெளிச் சாவகாசத்தால் நிதானமாகப் பொறுமையோடும் செய்து முடிக்கும் காரியமே சிறப்பைப் பெறுவதாக இருக்கும். அவசர புத்திக்காரன் இவ்விரு சாவகாசங்களின் துணையையும் விரும்பாமலே, தனது தனிவழியேசென்று தவறுகள் அநந்தம் புரிந்து விடுகின்றான். முதலில் தவறிய சிறுபிழை பிறகு பெருந்துயராக மாறுகின்றது. ஃ

தங்கள் பிரயாணத்தின் இடையே தந்தையும் குமாரனும் கப்பல் விபத்தில்ஸமுத்திரத்தின் வசமாக, குமாரன் தப்பிப்பிழைத்துக் கரையேறி மதுரை சேர்கிறான். அங்கு நண்பரும் கூடி, உத்தியோகமும் கிடைத்து, விவாகம் ஆகி, உன்னத வாழ்வு கொள்கிறான். இந்நிலையில் ஓர் நாள் வீதிவழியே செல்லுகையில் அலங்கோல உடையுடன் எதிர்ப்பட்ட ஒருவன் இவனைக் கண்டு ஆவலோடும் தழுவ, அவனைத் தன் தந்தையென்றறிந்தும், தனது புதுப் பெருமையில் அந்த ஆபாஸ மனிதனைப் பிதா என்றுகூற வெட்கி அவனைத் தள்ளிவிட்டுச் சென்றுவிடுகின்றான். பிதாவின் மனம் புண்ணாகிப் பிச்சையெடுத்து

---

சந்தேக நினைவு வஞ்சக எண்ணங்களையும், அல்பமான சிந்தனைகளையும் பெருக்கி விடுவதால், புத்தியும் அல்பமான போக்கில் சென்று, அல்பர்களை யோக்கியர்களாகவும், யோக்கியர்களை அல்பர்களாகவும் கருதும்படியான தடுமாற்றத்தை யுண்டு பண்ணிக் கடைசியிற் படுகுழியில் தள்ளி விடுகிறது.

ஜீவிக்கின்றான். பின் தன் குமாரனின் இருப்பிடம் அறிந்து அவன் மனைவியிடம் அடிக்கடி சென்று பிச்சையேற்று, "அம்மா, என்னை இந்தக் கதியில் என் மகன் விட்டிராவிடில் நீ எனக்குச் சொந்த மருமகளாக வேண்டும்" என்று கூறிச் சென்றுவிடுகின்றான். இதனைச் செவியுற்ற நங்கை திடுக்கிட்டு, ஐயோ! நம் நாயகன் தன் தந்தையைக் கைவிட்ட துரோகியா என்று கலங்குகிறாள். இச்சமயம் ஒரு பெண்ணும் குழந்தையும் அங்கு வந்து, அவளுடைய கணவன் தன்னை மணப்பதாக மயக்கிச் சேர்ந்து கையிலொரு குழந்தையும் தந்துவிட்ட கோரத்தைச் சொல்லுகிறாள். ஹா! இந்த அநியாயமுங் கூடவா என் கணவன் செய்தார் என்று கண்ணீர் விடுகிறாள் நங்கை. பின் தன் பிதா பாதுகாத்திருந்த வேதாந்த நூல்கள் அனைத்தையும் தன் நாயகன் பிறமதஸ்தரிடம் ஒப்புவித்துவிட்ட சண்டாளத்தனத்தைக் கேட்டுக் கதறுகிறாள். தந்தையைத் தள்ளிவிட்டுச் சென்ற ஒரு தீய பிழையின் வழியே—அந்த ஒரு படி தவறியதின் வழியே—பல படிகளும் தவறி, அநந்தமான அக்கிரமச் செயல்களிற் புகுந்து, நண்பர்களெல்லாம் தன்னை வெறுக்க,மகா பாபியாகி, அந்தோ! அன்றொரு நாள் என் தந்தை என்னைத் தழுவியபோது நான் மறுக்காமல் அவரை ஏற்றுக் கொண்டிருப்பேனாயின், இங்ஙனம் நெடுகத் தவறிக் கெட்டழியாமலிருப்பேனே யென்று புலம்புகின்றான். பின் தன் குமாரனின் அக்கிரமங்களை யெல்லாம் கேட்டுச் சகியாத தந்தை அவனைத் துரத்திச் சென்று ஆற்றின் நடுவே அவனைக் குத்திக் கொன்று, தானும் குத்திக்கொண்டு மடிகின்றான் ஆ! அந்தக் குமாரன் ஆதியில் ஒரு படி தவறிவிட, அதனின்றும் நேர்ந்த அலங்கோலங்களை என்னென்பது? ஃ

தனது பெருமை தங்கிய வாழ்வில் சிறு வேலை யொன்றுக்குச் செல்வது தாழ்வென்றும், பெரிய உத்தியோக பதவியையே பெற வேண்டு மென்றும், அந்த உத்தியோகமும் தான் இருக்கு மிடத்திற்கே நாடி வரவேண்டுமென்றும் ஒரு பேதை நினைத்து விடுகின்றான். பின் இந்தப் பிழையினின்றும், ஒருவரிடம் வேலைக்குச் செல்வது தன் அந்தஸ்துக்குக் குறைவென்றுகருதி விடுகிற பெரிய பிழையைச்செய்து விடுகின்றான். அப்பால், எவ்வேலைக்கும் முயற்சியின்றி வீட்டிலுட்கார்ந்து உண்டு உறங்குவதே தொழிலாகிக் கையிலிருந்த அனைத்தும் தீர்ந்து, மனைவியின் ஆபரணங்களில் கைவைத்து அதுவும் முடிந்து, மாங்கல்யக்கயிறுமட்டும் மனைவிக்கு மிச்சமாகின்றது. இந்நிலையில் குழந்தைகளும் தானும் மனைவியும் வேறு கதியற்றுப் போக, பின் தன் குடும்ப மனைத்தையும் தன் மனைவியின் தாய்

---

இமிடேஷன் கற்களைப்போலப் போலி அன்பினர்கள் தங்களின் ஸாகசத்தால் உண்மையான அன்பினரையும் தோற்கச் செய்து விடுவார்கள். ஆனால், அவர்களின் அன்பற்ற சண்டாளத்தன்மை தானாகவே வெளிவந்து விடும்.

வீட்டார் தாங்கிப் பல வருடகாலம் காத்து ஆதரிக்க, கடைசியில் அந்த ஆதரித்தோருக்கும் துரோகம் புரிந்து வஞ்சித்துப் படுகுழி யில் தள்ளி முற்றிலும் தீயோனாய் மகாபாபியாய் முடிகின்றான். முத லில் தனது கும்பத்திற்குச் செய்த துரோகத் தவறானது பின் தன் வாழ்நாள் முழுதுமே பிறரை வஞ்சிக்கவும் துரோகம் புரியவும் நேர்ந்து, தன் வாழ்வையே குலைத்து மீளாத நரகங் காணச் செய் வித்து விடுகின்றது. ஒரு படி தவறப் பல படிகளும் தவறுகின்றன.

ஃ

அன்பினரிடத்து அன்பற்றுப்போகும் தவறு, என்றுமே அன்னோரை அன்னியராகக் கருதச்செய்து பகைக்கவும் வைக் கிறது. ஒரு பொய்—ஒரு கொலை—ஒருமுறை ஒரு பெண்ணைக் கற் பழித்தல்—ஒருவரை வஞ்சித்து லாபமடைதல்—ஒருவரது அவ சரத்துக்கு உதவாமற்போன தன்மை—ஒரு முறை களவு புரிந்து பழகிய கை—ஒரு முறை ஒழுங்குதவறி விட்டமை—ஒரு சொட்டு சாராயத்தின் ருசி கண்டமை—ஒரு தரம் குலாவிய அன்னிய நங்கையின் ஸல்லாபம்—ஒருதினம் பாடசாலைக்குச் செல்லத்தவறிய பிழை—ஓர் இரவு படிக்காத பாடம்—முதலில் கோணிய ஒரு கோணல்—கணவனை எதிர்க்க ஒருதினம் துணிந்த துணிவு—அசங் கதமென்றுத் தூர விலகிப்போகாத ஒரு செய்கை—வரவு மீறி ஒரு தினத்திற் செலவிட்ட கை—வாங்கிய கடனை ஒருதரம் ஏமாற் றிய பழக்கம்—வாய் உபசாரத்தோடும் ஒரு விருந்தைத் தெருக் கடக்க அனுப்பிய செய்கை—ஒருதரம் இரவல் நகையை மோசம் செய்த போக்கு—வெட்டிப் பேச்சுகளிற் பழகிய ஒரு தினத்துச் சங்கதி—சோம்பற் பெண்களுடன் கூடிவிட்ட நெஞ்சம்—கோயில் உண்டியில் கையிட்டு எடுத்த ருசி—ஆலயச் சொத்தை அபகரித் திட்ட முதற் பழக்கம்—ஒரு முறை தன் வாடிக்கைக்காரனை ஏமாற் றிய இழிதன்மை—உணவுப் பொருள்களில் கலப்பு சேர்க்க ஒரு முறை துணிந்த கள்ளநெஞ்சம்—ஒருதரம் மனைவிமக்களை யடிக்கப் பழகிய கை—ஒரு சொல்லை ஒரு தடவை நிறைவேற்றத் தவறிய பிழை—முதல் தினத்தில் ஒருமணி பிசகி வந்தமை—ஒருதரம் தன் பணியாளுக்கு நினைத்த துரோகம்—ஒன்றில் விஸ்வாசமற்றுப் போனபோக்கு—இவை யாவும் பின்னுக்குப் பலபடிகளையும் தவறச் செய்து அந்தப் பிழைகளையே பல நாளைக்கும் புரியப் பழக்கிவிடு கின்றது. ஒரு நன்றி மறந்தோன் பல நன்றிகளையும் மறக்கின்றான். பக்கத்து வீட்டுச் சுவற்றைத் தன்னுடையதென்று கூறத் துணிந்த வன் பிறகு அடுத்த வீட்டுச் சுவற்றையும் தன்னுடைய தென்

கோர்ட்டு, தாசி வீடு, கடன் வாரண்டு, தனக்கு மறுவாரம் நடக்கப் போகும் விவாகம்—இத்தகையவற்றில் சம்பந்தப்பட்டோரின் மனம் அதி லேயே செல்லுமேயன்றி வேறு விஷயத்தில் திரும்பாது.

கின்றான். ஒரு முறை கற்பு தவறிய பெண் பிறகு நல்வழி நாடுவதே யில்லை. ஒரு முறை ஆசாரம் தவறியவன் பின் பல படிகளையும் விட்டு நெடுகத் தவறுகின்றான்.

ஃ

தனது வித்யா கர்வத்தால் எந்த ஆடவனுக்கும் தான் உட்படுவதில்லையென்று விவாகத்தை வெறுத்த ஓர் பெண், பிறகு பெரிய சனியனான காம உபாதையைத் தாள முடியாமல், ரகசிய சோரத்துவத்தின் வழியே அதை நிவர்த்தி செய்து கொள்ள முற்படுகிறாள். அதன் பயனாகக் கர்ப்பவதியாகிப் பிறந்த குழந்தையைக் கொன்றுவிடத் துணிகிறாள். இவ்விதமே பல சிசுஹத்திகளையும் புரியத் தேர்ந்துவிடுகிறாள். வெளி முகத்தில் மகா பரிசுத்தையாகத் தோன்றி, உள் முகத்திலோ பரம சண்டாளியாகிறாள். கடைசியில், மறுபடியும் ஒரு குழந்தையை ஈன்று அதைப் புதைக்கப்போகும் சமயத்தில் கையும் களவுமாகப் பிடிபட்டு விடுகிறாள். முதலில் தனது கல்விச் செருக்கால் விவாகத்தை மறுத்த ஒரு தவறு—பிறகு ரகசிய விபசாரத்திற்கும்—அப்பால் சிசுக்கொலைக்கும்—அதன் பின் அது போன்ற பல கொலைகளுக்கும் உட்படுத்திக் கொடிய பாதகியாக்கி விடுகின்றது. ஒரு படி தவறிய நின் விபரீதம் பல படிகளும் தவறிப் போகும்படி நேரிடுகிறது. ஒருகரம் கெட்ட பால் பிறகு நல்ல பால் ஆவதில்லை. யந்திரத்தின் ஒரு சிறு பழுதே முழு யந்திரத்தையும் பிறகு பாதித்துப் பழுதாக்குகின்றது.

ஃ

மனம் அஞ்சுவதும், மனஸாக்ஷி முன்னின்று தடுப்பதும் முதன் முதலாகச் செய்யப்புகும் தவறுதலுக்கேயாகும். அத்தருணம் அப்பிழையினின்றும் தன்னைத் தீரத்துடன் காத்துக்கொள்வோன், அந்தப் பழக்க அநுபவ வெற்றியால் பிந்திய பல சோதனைகளையும் வென்றுவிட வல்லோனாதல் கூடும். தன் அருகில் சயனித்த உறவின் முறையான நங்கை சிந்தை தடுமாறித் தன்னைப் பலாத்கரிக்கையில், அவள் கற்பைக் காத்து விலகித் தூரச்சென்று விடுவோன் பின் என்றைக்கும் வெற்றியாளனேயாவன். அந்த சமயம் தவறிவிடாத அவனது துணிவு அவனைக் குணசீலனாக்கி விடுகின்றது. தவறிவிடவோ—ஒரு பாவத்தைச் செய்யவோ—ஒரு அதிக்கிரமத்தைப் புரியவோ—ஒரு நீசச் செயலுக்குட்படவோ—ஞால வாழ்வில் எத்தகையோருக்கும் எதிர்பாராத விதமாய்—ஒரு சோதனை—ஒரு கால சந்தர்ப்பம்—நேர்ந்து கொள்வது சகஜமாயினும், அந்த வேளையில் தன் மனத்தை இழுத்துப் பிடித்துத் தன்னைத் தடுத்துக் கொள்ளப் பார்ப்பதே பின் எந்த நாளைக்கும் தவறு இழைக்

---

உண்மையைக் கூறுபவன் சிறுமைப்படவும், பொய் பித்தலாட்ட மோசங்களில் தேர்ந்தவன் சுகித்து வாழவும் நேர்கிறதே! அது எதனால் ஐயா?

காமல் தான் சுகப்படுவதற்கு வழியாகும். தன் மனம் என்றும் தூய்மையோடு இருத்தற்கும் அது துணை புரியும். இது உத்தம வழி. இவ்வாறில்லாது, தான் ஒரு முறை பிசகிப்போய் விடினும், அதன் பின்னரேனும் தன்பிழை தெரிந்து மீண்டும் அதைச் செய்யாவாறு தன்னைத் தற்காத்துக் கொள்ளுதல் வேண்டும். இது மத்திப வழி. இனி என்றும் தவறுவழி நாடுவதில்லையெனச் சபதம் கூறி, சமயம் நேர்ந்தவிடத்தெல்லாம் தன் மனதுக்குச் சரிபோனபடி நடந்து விட்டு, இனிமேல் தவறுதிருக்கமுயல்வேனெனல் அதம வழியாகும். இத்தகையோன் திருந்தி உருப்படுதல் எக்காலத்திலுமில்லை. ஒரு தவறுதலைச் செய்து அவ்வழியே அநுபவம் பெறுவதை விட, அத்தவறினைப் புரியாமலே தன்னைக் காத்துக் கொண்டு அனுபவசாலியாதலே மேல். ஒரு படிகூடத் தவறுவதில்லை யென்ற மனத்துணிவு ஒன்று மட்டும் திடமாக உண்டாயின், அத்துணிவுமிக்காரிடம் பிசாசுகூட நெருங்காது. மாடியில் சயனித்திருந்த ஒருவர் தமது இறந்த தமயனைப் போன்ற ஒரு உருவம் எதிரில் நெருங்குவதைக் கண்டு, சிச்சி! இங்கு ஏன் வந்தாய், ஓடிவிடு என்று ஆக்கிரகத்துடன் எழுந்து துரத்திச் செல்ல, அதுவும் எட்டியெட்டி விலகிப் பின் மறைய, அந்த இடத்திலேயே அவர் நிர்விசாரமாக நித்திரை புரிவதானர். இவ்விதம் தம்மைச் சமீபித்த பேய்களையும் தமது மனத்துணிவால் ஓட்டிவிட்ட தைரியசாலிகள் பல்லோராவர். எதிலும் மனத்துணிவு பற்றி, ஸன்மார்க்கமும் சத்தியமுமே நமது லக்ஷ்யமாகக்கொண்டு, நம்மைச் சூழவரும் பொல்லாங்கான சோதனைகளிடம் வீரத்தோடும் எதிர்த்து நிமிர்ந்து நிற்கப் பழகிக் கொள்வோமாயின், எந்த ஒரு படியும் தவறுதிருக்க நாம் வல்லவர்களாகி விடுவோம்; எந்தச் சோதனையினின்றும், எந்தத் தவறு பிழைபாடுகளினின்றும் நம்மை மீட்பித்துக் கொள்ள சக்திவந்தவர்களாகி விடுவோம். எல்லா சக்தியும்—வெற்றியும்—நாம் எந்த ஒரு படியும் தவறிவிடாதுள்ள தன்மையிலும்—யாவுமே நமது மனத்துணிவிலும், நிஷ்களங்கமான தெய்வபயத்துடன் கூடிய பரிசுத்தத் தன்மையிலுமே இருக்கின்றது. அத்துணிவையும், மனப் பரிசுத்தத்தையும், கடவுளுக்குப் பிரீதியான நல்வாழ்வையும் நாம் பெறக்கடவோம்.

---

தான் ஒருவன் மீது யதார்த்தமான அன்பும் நம்பிக்கையும் வைத்திருந்து, பிறகு அந்த அன்புக்கும் நம்பிக்கைக்கும் விரோதமாக அவனிடமிருந்து சிறும் கடிதம் வந்தால் உடனே துள்ளித் துடித்துத் தவித்துப் போகப் பண்ணுகிறது. தான் அன்பும் நம்பிக்கையும் கொள்ளாத இடத்திலிருந்து தன்னை எதிர்த்துக் கடிதம் வரின் அதைக் குப்பையில் எறியச் சொல்லுகிறது. அதை லக்ஷ்யம் செய்வதுமில்லை.

---

அதிகமாகச் சந்தேகித்து வெகு ஜாக்கிரதையுடன் இருக்கும் மனிதன் தான் கடைசியில் ஒரு சிறு சங்கதியில் எப்படியோ ஏமாறிப் போகிறான்.

# முத்து வாத்தியார்.



முத்து வாத்தியாருக்கு ஒரு ஜவுளிக்கடை வைத்துக் கொண்டு ஹாயியாக திண்டில் சாய்ந்தபடி வீற்றிருக்கவேண்டுமென்று நெடுநாளாக ஆசை. அதற்காக எவ்வளவோ தடவை பணம் சேர்த்தும், பாதிபணம் கூடியதும் திடீரென்று பல செலவுகள் குறுக்கிட்டுக் கரைந்து போவதாயிருந்தது. கடைசியாக, ஆடுதுறை அங்கப்பனைப் பிடித்தார். அவன் ஒரு நாட்டுக்கோட்டைச் செட்டியார் கடைக்கு ஏஜண்டாக இருந்தான். வாத்தியாரைப்பற்றி அவன் எவ்வளவோ பெருமையாக நினைத்திருந்ததால் பட்டணத்தில் இருக்கிற ஜவுளிக் கடையிலிருந்து வேண்டிய ஜவுளிகள் சப்ளை செய்வதாயும் நாணயமாய்ப் பிரதிமாதமும் பணமும் வட்டியும் செலுத்திவிட வேண்டுமென்றும் சொன்னான். எல்லாம் வாய்ப் பேச்சிலேயே முடிவாயிற்று. வாத்தியார் என்ன சாமான்யமா? எதிலும் தன் கையெழுத்து சிக்கிக் கொள்ளாதபடி ஜாக்கிரதையாக இருந்தார். பட்டணத்துக்குப் புறப்படுகிற வழியில் தனக்குத் துணைக்கு ஒருவனை மயக்கிப் பிடிக்க எண்ணினார். ஃ

மாயவரத்தில் மன்னருசாமி யோக்கியமான மனிதன். எதையும் உடனே நம்பிவிடுகிறவன். அவனுக்கு முத்து வாத்தியார் மீது பரம விசுவாசம். அவர் தன் வீட்டுக்கு வரவே தடபுடலான விருந்துகள் நடத்தினான். வாத்தியார் தான் நரிப்பாளையத்தில் பெரிய ஜவுளிக்கடை வைக்கப் போவதாயும், மன்னார்சாமிக்குத் தக்கசம்பளம் போட்டுக் கொடுப்பதாயும், ஜவுளி மூட்டைகளை ரயிலில் ஏற்றி அனுப்பத் தனக்குத் துணையாய் நாலைந்து தினத்தில் சென்னைக்கு வந்து சேரும்படியும் சொல்லி விட்டுச் சென்றார். வேலை கிடைக்காமல் திண்டாடிய மன்னார்சாமிக்கு இந்தச் செய்தி அதிக ஆனந்தத்தைக் கொடுத்தது. ஃ

ஒரு வாரமாயிற்று. சென்னையிலிருந்து மன்னார்சாமிக்கு ஒரு தந்தி வந்தது. அதில் உடனே புறப்படும்படி வாத்தியார் கண்டிருந்தார். தந்திச் செய்திக்கு எப்போதுமே ஒரு மகிமை உண்டல்லவா? மன்னாரு அன்றிரவே புறப்பட்டு மறுநாட் காலையில் சென்னை சேர்ந்தான். வாத்தியார் அவனைக் கொண்டாடி, அவன் கொண்டு வந்திருந்த ஐந்து ரூபாயில் அவனோடு சாப்பிட்டுக் கொண்டிருந்தார். எந்த ஜவுளி மூட்டையும் காணோம்! மன்னார்சாமி திகைத்தவனாய்த் தனக்கு மூன்று ரூபாய் மணியாடர் செய்யும்படி ஒரு நண்பருக்கு எழுதினான். ஃ

மன்னாருவின் ஐந்து ரூபாயும் தீர்ந்து விட்டது. அன்று அரிசி வாங்கவே பணமில்லை. மன்னாரு வெளியிற் சென்றிருந்தான். அந்த சமயம் தபாற்காரன் மன்னாருவுக்கு மூன்று ரூபாய் மணியாடர் வந்திருப்பதாகச் சொன்னான். வாத்தியாருக்கோ வந்த

சிலர் அந்த நிமிஷத்திற்கு மட்டுமே இனிப்பாகப் பேசுகிறவர்களை அதிகமாக நம்பி, தங்கள் மனத்தில் இருப்பதையெல்லாம் கொட்டிவிடுகிறார்கள்.

பணத்தை விடக் கூடாதென்று கருத்து. தானே மன்னார்சாமி யென்று கூறிக் கையெழுத்திட்டு மூன்று ரூபாய் மணியாடரைப் பெற்றுக்கொண்டார். சிறிதுநேரத்திற்குப் பின் மன்னாருசாமி வந்து விஷயம் அறிந்து இது பெரிய தண்டனைக் கேஸாகுமே யென்றான். எப்படியோ அரிசி வாங்கப் பணம் கிடைத்தது. அன்று பொழுதும் போயிற்று.

ஃ

மறுநாள் தபாற்காரன் மூத்து வாத்தியா ரெங்கே; அவருக்கு அங்கப்பன் என்பவரிட மிருந்து ஒரு ரிஜிஸ்தர் வந்திருக்கிறது என்று மூத்து வாத்தியாரைக் கேட்டான். வாத்தியார் திகைத்தார். தபாற்காரனுக்கு அவர் நேற்று மன்னார்சாமியாகத் தரிசனம் கொடுத்திருக்கையில், இன்று மூத்து வாத்தியாராகத் திருவவதாரம் செய்வது எப்படி? எனவே, தபாற்காரனிடம் வாத்தியார் வெளியில் சென்றிருப்பதாயும் நாளை வருமாறும் கூறி யனுப்பிவிட்டு, மன்னார்சாமி வந்ததும், நீ நாளைக்கு என கையெழுத்தைப் போட்டு வாங்கிவிடு என்றார். மன்னார்சாமி அதற்கு இணங்காமல், அன்றே இருப்பிடத்தைச் சூளையிலிருந்து ராயபுரத்துக்கு மாற்றுவதற்கு ஏற்பாடு செய்து, ரிஜிஸ்தரை ராயபுரத்துக்கு அனுப்பும்படி வாத்தியாரைக்கொண்டு தபாலாபீஸுக்கு ஒரு கடிதம் அனுப்பினான். அன்று மாலையே வாத்தியாரும் மன்னாருவும் ராயபுரத்துக்குக் குடி வந்து விட்டனர். மறுநாட் காலையில் புதிய தபாற்காரன் ரிஜிஸ்தருடன் வர வாத்தியார் தனது கையெழுத்திட்டுப் பெற்றுக் கொண்டார். மன்னாரு செய்த இடம் மாற்றிய தந்திரத்தால் ஒரு பெரிய ஆபத்து நிவர்த்தியாயிற்று. தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போயிற்று. ஃ

ரிஜிஸ்தர் கடிதத்தில் அங்கப்பன் ஜவுளிகள் பெறுவதற்கு ஜாப்தாவும், ஜவுளிகள் கொடுக்கும்படி சென்னைக் கடைக்காரருக்குக் கடிதமும் அனுப்பியிருந்தான். வாத்தியாரின் ஆனந்தம் சொல்ல வேண்டுமோ? அன்றைய தினமே தமது புது ஜவுளிக்கடையில் சாய்ந்துகொள்ள ஒரு திண்டு வாங்கிவிட்டார்! மன்னாருவும் வாத்தியாரும் கூட இருந்து எல்லா ஜவுளி மூட்டைகளையும் நரிப்பாளையத்துக்கு ரயிலில் ஏற்றினார்கள். சென்னையில் சில பிரபுக்களைக் கண்டு கவிகள் பாடி வாத்தியார் ஒரு ஐம்பது ரூபாய் போல் செலவுக்கும் சம்பாதித்துக் கொண்டார். சென்னை வாசத்தை முடித்து இருவரும் ரயில் ஏறினர். வாத்தியார் சென்னையில் பலரிடம் வாங்கிய கடன்களைத் திருப்பித் தாராமலே பிரயாணமானார். ஃ

நரிப்பாளையத்தில் புதிய ஜவுளிக் கடை! வாத்தியார் திண்டில் சாய்ந்திருக்கிறார். மன்னாரு வியாபாரம் நடத்துகிறான். முதல் மாதத்திலேயே நல்ல வியாபாரம். பணமும் வட்டியும் ஒழுங்காக அங்கப்பனுக்கு வாத்தியார் அனுப்பி வைத்தார். உண்மையைச் சொல்லப்புகின், அந்தப் பணத்தை அனுப்புவதற்கு அவருக்கு மனமே இல்லை. என்னவோ தண்டத்திற்கு அழுது தொலைக்கிறேன் என்று சொல்லிக்கொண்டே அனுப்பித் தீர்த்தார். மறுநாள் வாத்தியார் இப்படி வியாபாரம்நடந்தால்கட்டாதென்றும், சரக்குகள் சுலபத்தில் தீராதென்றும்,

---

சில பாகவதர்கள் பணத்தை அதிகமாய் முடிபோடுவதில் மிகவும் கெட்டிக்காரர்களாக இருக்கிறார்கள்! அதை வைகுண்டத்தில் செலவிடபோலும்!

கைக்குப் பணம் சீக்கிரம் வராதென்றும், பாதி விலைக்கு ஜவுளிகளை ஏலம் போட்டு விற்கும்படியும் மன்னாருவுக்குத் திட்டம் செய்தார். மன்னாருவுக்கு வாத்தியாரின் மோச புத்தி பிடிக்கவில்லை. அவன் வாத்தியாரிடம் சொல்லிக் கொள்ளாமலே தன் ஊருக்குப் புறப்பட்டுப் போய் விட்டான். இனி அவனால் ஆகவேண்டிய வேலையில்லை, அவன் தொலைந்ததே சரி யென்று வாத்தியார் சந்தோஷப்பட்டுக் கொண்டார். ஃ

ஒரு மாதத்தில் பாதிவிலை, கால் விலையாக ஜவுளிகளை முழுதும் விற்றுத் தீர்த்து ஆயிரம் ரூபாய் ரொக்கமாக்கிக் கொண்டார். இரண்டாவது மாதம் அங்கப்பனுக்குப் பணம் அனுப்பவில்லை. மூன்றாவது மாத முதலிலோ ஜவுளிக்கடையே யில்லை! வாத்தியாரும் குடும்பத்துடன் எங்கோ மறைந்து விட்டார். கப்பல் ஏறிப் போய் விட்டதாகச் சொல்லிக்கொண்டார்கள். அங்கப்பன் பணம் வராததைக் கண்டு நரிப்பாளையத்திற்கு வந்து பார்த்து வயிறு எரிந்தான். நாட்டுக்கோட்டைச் செட்டியார் சும்மா இருப்பாரோ? அங்கப்பனிடம் நாலாயிரம் ரூபாய்க்கு வழி யென்ன வென்று திருப்பிக் கொண்டார். அங்கப்பன் தங்கப்பனல்ல; அவனும் ஒரு பிச்சையப்பனே! அவன் சொந்த வீட்டை செட்டியார் எழுநூறு ரூபாய்க்கு ஜப்தி செய்துவிட்டுப் பாக்கிப் பணத்துக்கு மாதம் 25— ரூபாய் வீதம் கடை சம்பளத்தி லிருந்து கொடுத்துப் பத்து வருஷங்களில் கடனைத் தீர்த்துவிட வேண்டுமென்று சொல்லி அங்கப்பனிடம் பத்திரம் எழுதி வாங்கிக் கொண்டார். பிறருக்கு உதவி செய்யப்போய் அங்கப்பன் பத்து வருஷ அடிமையானான். வாத்தியார் போன இடம் இன்னும் தெரியவில்லை!

## காரியம் முடிவு பெறுவதை முதலில் கவனி.

ஒரு காரியத்தை நிறைவேற்றப் புகுகையில் நமது விருப்பத்திற்கு விரோதமாக எதிர்ப்பும் ஆக்ஷேபனைகளும் கிளம்பலாம். அந்த சமயத்தில் நாம் ஆத்திரமடைந்து மட மட வென்று எதிர்ப்பு வார்த்தைகளைக் கொட்டி விடுவதில் காரியக் கெடுதலையன்றி, அது முடிவதும் தவறிப் போகலாம். பிறர் சொல்வதற் கெல்லாம் தலையசைத்து, வணங்கி இணங்கியே சென்று காரியம் முடித்துக்கொண்ட பின்பு, நம்மை எதிர்த்தவர்களின் மீது குதிரை யேறுவதே சாமர்த்தியம். அப்பொழுதுதான் நமது வார்த்தைக்கு மதிப்பு ஏற்படும். நமது கோபத்திற்கும் கௌரவம் உண்டாகும். ஆகவே, முதலில் உனது காரிய முடிவைக் கருத்தில் வை.

தாங்களே மேதாவியென நினைத்து மற்றவர்களைக் குறை கூறுவோர், உண்மையாகவே மேதாவிகளாய் நியாயம் தெரிந்திருப்பின் ஒருபோதும் அவ்வாறு குறைபேச முன்வந்திரார்.

# இனிய குறிப்புகள்.



பணம் பத்து செய்யும். பணமிருந்தால் பந்துக்கள் கூடுவர். பணமிருந்தால் பலமுண்டாகும். பணமே மனோத்ஸாகத்துக்கும் தைரியத்துக்கும் காரணம். இடுப்பில் இரண்டு பணமுண்டானால் அசைப்பில் குறைவிராது. சிறுகச் சிறுகப் பணம் சேர்த்து விட்டவனின் தொனியும், அவன் போடுகிற நடையும் புது விதமாக இருக்கும். எவரையும் அலக்ஷியம் செய்யாமல் எடுத்தெறிந்து பேச வைப்பதற்குப் பணத்தின் திமிர்தான் காரணம். இவ்வளவு உபயோகமுள்ள பணமே பகையை விளைக்கும். பொறாமையைப் பெருக்கும். பாந்தவ்யத்தைப் போக்கும். பெருமையை யொழிக்கும். சண்டையை வளர்க்கும். கீர்த்தியைக் கெடுக்கும். கொலை பழி பாவங்களைச் செய்யவைக்கும். ஈன்ற மகனுக்கே படுகுழி வெட்டப்பண்ணும். பிள்ளையைப் பெற்றவன் அவனைப் போஷிக்கக் கஷ்டப் படுவதைப்போல் பணத்தைப் படைத்தவன் அதைக் காப்பாற்றக் கவலைப்படுகிறான். சூதன், தூதன், தாசி, வேசி, துஷ்டன், இஷ்டன், மாமன், மைத்துனன், அதிகாரி, அபகாரி, அவன், இவன் ஆகிய எல்லோரும்—பிணத்தைப் பிடுங்கும் நாய், நரி, கழுகு, கூளி, பருந்து, பூச்சி முதலிய ஜெந்துக்களைப்போல் பணக்காரனைச் சுற்றிக்கொண்டு அவனிடமுள்ள பணத்தைப் பிடுங்கி ஆளுக் கொருவராய்ப் பங்கிட்டுக் கொள்வார்கள். இல்லாத இடத்தில் ஈயும் போகாது. ஏழையிடம் எவரும் செல்லார். ஏழைக்கு வயிற்றுக் கவலையைத் தவிர வேறு கவலையில்லை. ஆகவே, பணமுள்ளவன் வெகு அடக்கமாயிருந்து நல்லோரை நாடி நியாய வழியில் நடக்கவேண்டும். மூடன் கையிலகப்பட்ட புஸ்தகமும், பேடி கையிலகப்பட்ட போர்ப்படையும், விருத்த மணவாளனிடம் சிக்கிய யுவதியின் யௌவனமும், குருடன் கையிலகப்பட்ட படமும்போல் சில லோபிகளிடம் தனலக்ஷ்மியானவள் அகப்பட்டுத் தவிக்கிறாள். பணத்தை ஸம்பாதிப்பதும், காப்பாற்றுவதும், விர்த்தி செய்வதும் சாமர்த்தியமல்ல. அதன் வட்டியை நற்காரியத்தில் செலவழிப்பதும், அதனால் தான் நலத்தை யடைவதுமே சாமர்த்தியமாம்.

ஃ

ஒவ்வொருவனும் தன்னுடைய நன்மையைக் கவனிக்க வேண்டியது அவசியமே. ஆயினும், பிறருக்குக் கெடுதல் செய்வதும், நன்மை செய்தார்க்குத் துரோகம் புரிவதும் தீது. பாப கர்மத்துக்குத் தக்க பலன் கிடைக்குமென்பது எந்த மதஸ்தரும் ஒப்புக்கொண்ட விஷயமே. யாரானாலும் சரி, தான் செய்த கர்மத்தின் பலனை அனுபவித்தே தீரவேண்டும். துரோகம் செய்தவர்கள் ரோகிகளாயும் தரித்திரர்களாயும் பிறந்து கஷ்டமடைகின்றனர். புண்யமாவது பாவமாவது அளவுக்கு அதிகமானால் அவற்றின் பலன் இந்த ஜென்மத்திலேயே

---

மோசம் செய்த சண்டாளர்களை மோசம் போனவர்கள் அறியாவிடினும், தெய்வம் அறிந்து வைத்துப் பழிக்குப் பழிவாங்கி விடுகிறது.

கிடைத்துவிடும். ஸ்வய நலமென்பது எத்தனையோ பேர்களின் பின் சந்ததியை வாழாமல் பாழாக்கிவிட்டது. எத்தனை பேர்கள் மற்றவரை மோசம் செய்து அதன் பலனைக் குல க்ஷய மானார்கள்! புத்திசாலியானவன் இன்றைக்குத் தனது தீய எண்ணத்தால் வருகிற லாபத்தை நினைக்கக்கூடாது; நாளைக்கு வருகிற அதன் பலனை நினைத்து நடுங்கவேண்டும். எப்போதும் நல்ல சித்தமுள்ளவனாய் துரோக மென்பதை ஸ்வப்பனத்திலும் நினையாமல் தெய்வத்துக்குப் பயந்து நடக்கவேண்டும். மனுஷ்யனுக்குப் பயந்து நடப்போன் ஒரு சமயம் தெய்வத்தையும் வஞ்சிக்கலாம். ஆனால், தெய்வத்துக்குப் பயந்து நடப்பவனே உலகில் யாவராலும் பிரீதியுடன் கொண்டாடப்படுவோனாவான்.

ஃ

“ அவஸரப்பட்டால் ஆகுமா ? ” என்று ஒரு கவி கூறியிருக்கிறார். இது எதற்காகவெனில், பலன் கிடைக்கவில்லையே யென்று ஆத்திரப்பட வேண்டா மென்பதற்கேயாம். ஒவ்வொரு காரியத்தையும் நிதானமாய்ச் செய்வதுதான் நன்மை. ஆயினும், வீணாகத் தாமதம் செய்யாமல் சுறுசுறுப்பாகச் செய்து முடிக்கவேண்டும். சிலர் தங்கட்குப் பிறர் சொன்ன நற்புத்தியைப் பேதமாக அர்த்தம் செய்துகொண்டு அவர்களைத் தூஷிக்க ஆரம்பித்து விடுகின்றனர். எடுத்ததற்கெல்லாம் மறுத்தே பேசக்கூடியவன் பிறரது சொல்லிலுள்ள நன்மையைக் கவனியான்.

ஃ

“பொறுமை பெருமையைத்தரும்” தன் விஷயத்தில் அபசாரம் செய்தவர்களை மன்னித்துப் பழி வாங்காதிருப்பது பொறுமை. தன்னைச் சார்ந்தவர்களை ஹிம்ஸிக்குங்கால் பொறுமையா யிருக்கலாகாது. திருவள்ளுவரின் பொறுமையைப் பரீக்ஷிக்க வேண்டி ஒரு சிறுபையன் அவரிடமுள்ள 4—முழத்துண்டைக் கையில் எடுத்து “என்ன விலை” என்றான். வள்ளுவர் “ அது நாலுபணம் ” என, பையன் அத்துண்டை இரண்டாகக் கிழித்து ஒன்றின் விலை யென்ன வென்றான். நாயனார் பொறுமையோடு ஒவ்வொரு துண்டும் இரண்டணா வென, மறுபடியும் அவரது பொறைமையைப் பரீக்ஷிக்கவேண்டி திரும்பவும் அத்துண்டை இரண்டாகக் கிழித்து ஒவ்வொன்றின் விலையையும் கேட்டான். அப்போதும் வள்ளுவர் கோபம் கொள்ளாது ஒரு அணா என்றார். பையன் அத்துண்டுகள் தனக்கு வேண்டாமென்று சொல்லிக் கீழே யெறிந்து ஓடிப்போய், மறுதினம் வந்து வள்ளுவரின் மனைவி கிணற்றில் ஜலம் எடுக்கையில் தாம்புக் கயிற்றைப் பிடித்து இழுத்துத் தொந்தரவு செய்தான். உடனே நாயனார் கோபங்கொண்டு அவனைக் கன்னத்திலறைந்து விரட்டினார். இதனால், தம்மைச் சேர்ந்தவர்கட்கு அபராதம் செய்யும் பேர்வழிகளைத் தண்டியாமல் விடுவது பிசகென்றறிகிறோம். பொறுமையானது, காலத்துக்கும் இடத்துக்கும் தக்கபடி இருக்கவேண்டுமென்ப. ஒரு பாம்பைக் கண்டவிடத்து அதை அடியாமல் ஜீவகாருண்யம் பாராட்டிப் பொறுமையா யிருப்பதானது, திருடர் முதலியோருக்கு இடம் கொடுத்துக் கோபியாமலிருப்பதுபோலாம். இவை தோஷங்களாகும். இவ்விதமே துர்ச்சனருக்கு இடம் தருவதும் பொறுமை யாகாது. ஃ

---

உத்தியோகத்தை விடவோ துக்கம். உபகாரச் சம்பளம் பெறவும் மனமில்லை. ஆனால் வயதோ ஆய்விட்டது. இடையே வியாதிகள் வேறே!

இந்த சாஸ்திர ரீதியாக ஒருவன் இறக்கும்பொழுது கொள்ளும் நினைவே அவனுடைய மறு ஜென்மத்துக் காரணமாம். பரதர் தமது அந்தியத்தில் தாம் வளர்த்த மானின் கதி தமக்குப் பிறகு என்ன ஆகுமோ என்று அதைப் பற்றியே நினைத்தவாறு பிராணனை விட்டார். அது காரணமாக, மறு ஜென்மத்தில் மானுகேவ பிறந்தார். இவ்விதமே, மனிதர்களா லடிக்கப்பட்டுத் தெருவில் உயிரைவிடும் நாய்களுக்கு மனிதனிடத்து உண்டான அச்சமே அந்த சமயம் இருக்கின்றது. மனிதனைக் கண்டு பயந்த நினைவால், இறக்கும் போதும் மனிதனின் நினைவோடேயே இறக்கின்றன. இவ்வாறு மரிக்கும் நாய்கள் மேலே கூறிய சாஸ்திரப்படி மறு ஜென்மத்தில் மனிதர்களாய்ப் பிறந்து முன் ஜென்ம வாஸனை போகாமல் நாய்க் குணத்தையே கொண்டு சீறி விழுகின்றனவென்று என் சொல்லக்கூடாது? சீறி விழுவோர் முன் ஜென்மத்தில் நாயாக இருந்திருக்கலாமென்று ஊகிப்பது போலவே, சாந்தகுணம் படைத்தோரை முன் ஜென்மத்தில் உத்தம மனிதர்களா யிருந்தார்க ளென்றும் கிரகிக்கலாம்.

ஃ

மூத்தாள் இளையாள் பொறாமை கணவன் இறந்து நெடுங்காலமாயினும் போவதில்லையாம். ஓரிடத்தில் மூத்தாளுக்குத் தேள் கொட்டிவிட, இளையாள் அதற்குச் சிரித்துக் கொண்டே நின்றாளாம். தீண்டிய தேளை அடிக்காமல் அப்படியே உயிருடன் வெளியில் எறிந்துவிட்டாளாம். இவ்விதம் தேளைக் கொல்லாமல் எறிந்தால் அது தீண்டியவர்கட்கு விஷம் அதிகமாக ஏறுமென்பார்கள். நன்றாக விஷம் ஏறட்டுமென்று இளையாள் அதைக் கொல்லாமல் எறிந்தாள்போலும்! பேரன் பேர்த்திகளைப் பெற்றுத் தளர்ந்துவிட்ட பிறகுங்கூட சக்களத்திப் பொறாமை போவதில்லையாம்!

## பணப்பையின் மகத்துவம்

நம்முடைய வேலையை இன்னொருவன் தனது சொந்த வேலையைப்போல் சிரத்தையுடன் செய்யும்படி ஏவுதற்கு வழி எப்படி? நாம் அந்த வேலையைச் செய்யும்படி சம்பளத்திற்கோ கூலிக்கோ அவனை அமர்த்திவிட்டால், நம்மைவிட அதிக சுறுசுறுப்பாகவும், நாம் மெச்சவேண்டுமென்று அக்கரையாகவும் செய்து முடித்துவிடுவான். எல்லா மர்மமும் அவிழ்த்துக்கொடுக்கும் பணப்பையிலிருக்கிறது! அவனுக்குத் தந்த கூலி ஆறணவானால் நமது லாபமோ அறுபது ரூபாயாகிறது. ஆகவே, கூலியுடன் நன்றியும் காட்டுக.

அன்பற்றவர்களுக்கென்றே ஒன்று செய்ய நினைத்துத் துணிந்தாலும், அந்த சாமான் தயாரான பின்பு அதை அவர்கட்கு ஏன் தர என்று வெறுப்புடன் மற்றொருவருக்குக் கொடுக்கப் புத்தி போகிறது.

# கதையும் கற்பனையும்.



ஒரு கதையை வரையும் பொழுது அதில் கற்பனு சக்தியே முக்கியமான விஷயமாகும். கற்பனையின் சூட்சிகள் இல்லாமல் கந்தயை வரைவதிற் பயனில்லை. அது ருசிக்கவு மாட்டா. விசேஷித்த புத்தி தீக்ஷண்யம் வாய்ந்தோருக்குக் கற்பனு சக்தி அதிகமாயிருக்கும். அவர்கள் கதையில் வரும் இதர விஷயங்களைச் சுருங்கச் சொல்வதிலேயே எழுதிச் சென்று, கற்பனைகளை மட்டும் அபரிமிதமாய் நிறைத்து வைப்பார்கள். அவர்களுக்கு எழுதிச் செல்லுந்தோறும் அதிகமான விஷயங்கள் கிடைத்துக் கொண்டே யிருப்பதால், அனுவசியமானவற்றை நீக்கி அவ்சியமானவற்றை மட்டும் கூட்டி 500–பக்கங்களில் எழுதக் கூடியவற்றை 100–பக்கங்களில் நெருக்கிச் சேர்த்துப் பூர்த்தி செய்வார்கள். ஒரு பக்கம் முற்றிலும் எழுதித் தெரிவிக்கக் கூடிய விஷயத்தை நாலைந்து வரிகளில் அதி சுலபமாய் விளக்கிச் சுருக்கி விடுவார்கள். ஒவ்வொரு பக்கத்திலும் ஒவ்வொரு புதுக் கற்பனைகள் தோன்றிக் கொண்டே செல்லுமாறு பக்குவப்படுத்துவார்கள். இடையிடையே நீதிகளையும் புத்திமதிகளையும் கூற நேர்ந்த இடத்திலும் அவற்றைச் சிறு சிறு குறிப்புகளால் உணர்த்தி விட்டு மறுபடியும் கதையைத் தொடங்கிக் கொள்வார்கள். அவர்கள் உணர்த்திய போதனைகள் ஆங்காங்கு இலை மறைந்த காய் போன்று தோன்றியும் தோன்றுமலும் விளங்கி, கதையின் கற்பனைத் திறமே வியக்கும் வாறுக முதலில் நின்று நூல் முழுதுக்கும் வியாபித்திருக்கும். எதையும் வாசிக்க சலிக்காதிருக்குமாறு அளவறிந்து சேர்ப்பதில் வெகு பிரயாசை எடுத்துக் கொள்வார்கள். எளிய நடையில் எழுதுவதாகவே காண்பித்துப் பல இடங்களில் உயரிய பதங்களையும் பிரயோகித்து, அவற்றிற்கு முன்னும் பின்னுமுள்ள பதங்களால் கடின பதத்தின் பொருளைப் படிப்பவர்கள் தாங்களாகவே யறிந்து கொள்ளுமாறு அமைத்திருப்பார்கள். உலக இயற்கையை வர்ணித்துச் செல்லும் பொழுது அது பல பக்கங்களுக்குப் பெருகினுலும்,வாசிப்பவர்களின் கண்ணும் கருத்தும் அதிலேயே படிந்து மயங்கும்வாறுக நேர்த்தியான முறையில் சேர்ப்பார்கள். ஒவ்வொரு கற்பனையும் திடுக்கிட்டு வியக்குமாறு இருக்கும். தமது வாசக நடையிலேயே ஒரு விதமான தித்திப்பையும் சேர்த்து, கதையையும் கற்பனையையும் விட அந்த இன்பான நடைக்கும் பதஜோடிளைகளுக்குமே அந்த நூலை எவரும் விரும்பி வாசிக்குமாறு செய்து விடுவார்கள். குழந்தைகள்கூட ஆசையோடும் விரும்பிப் படிக்குமாறு மயக்கி விடுவார்கள். நம் நாட்டிலுள்ள பழங்காலத்துக் கதைகளில் இந்த விசேஷத்தை அதிகமா

---

பழங்காலத்து வாரப்பத்திரிகைகள் இரண்டு மூன்று வரிகளில் வர்த்தமானக் குறிப்புகள் வரைந்து, அதற்கே பத்திரிகையில் பல பக்கங்களைத் தந்து, மற்றவைகளைச் சிறு சிறு குறிப்புகளாக்கிப் பிரசுரித்தன. இப்பொழுதோ பெரிய பெரிய வியாசங்களே வாரப்பத்திரிகைகளில் மலிந்து கிடக்கின்றன.

கக் காணலாம். தற்போது நவீன மாய்க் கதைகள் புனைவோரிற் சிலரும் வெகு திறமையுடன் எழுதி முடித்திருக்கின்றார்கள். இவர்களெல்லாம் கற்பனா சக்தியையே கதையின் பிரதான அங்கமாகக் கொண்டு, அந்தக் கதையின் இதர விஷயங்களை வீணே வளர்க்காமல் கூறியது கூறல் இன்றிச் சுருக்கி முடிக்கிறவர்களாவார்கள். எந்த ஒரு அல்ப விஷயத்தை எடுத்துக் கொண்டபோதிலுங் கூட, அது நன்கு ருசிக்கத் தக்க விதமாய் ஆச்சரியப்படத்தக்கவாறாகப் புதுமைப் படுத்தி விடுவதில் சிலர் நிபுணர்களாவார்கள். குப்பையிற் கிடக்கும் சங்கதிகளுக்குக் கூடப் பொன்முலாம் பூசிப் பளபளப்பாக்கி எவரும் விரும்பும் படி செய்து விடுகிறார்கள். அவற்றை வாசிக்கும் பொழுது இந்த சாமான்ய சங்கதியிலிருந்து அவர் எவ்வளவு பெரிய கற்பனையைச் சிருஷ்டித்து உயர்வாக்கி விட்டார் என்று வியப்புறும் வண்ணமாக இருக்கின்றது. இதிலே இன்னொன்றும் உண்டு; இத்தகையோர் எழுதும் நூலில் ஒரு வரியை விட்டு விட்டு வாசிப்பினும் அத்துடன் கதையே தெரியாமற் போகும்படியான விதமாக அவ்வளவுக்கு நெருக்கி விஷயங்களைச் சேர்த்து அருமையான நூலாக்குகிறார்கள். இன்னோரெல்லாம் சுருங்கச் சொல்லி விளங்கவைக்கும் மேதாவிகளாவர். ஃ

வேறொரு சாரார் ஒரு சிறிய கற்பனையைத் தேடிப்பிடித்துக் கொண்டு கதையை நெடுக வளர்த்துச் செல்வார்கள். கதையில் வரும் ஒரு விஷயத்தின் தொடர்ச்சியை யறிவதற்குப் பல பக்கங்களை வாசிக்காமலே தள்ளிச் சென்று பதினைந்தாவது பக்கத்திற்கு அப்பால் இருக்கும் அந்த விஷயத் தொடர்ச்சியை எட்டிப் பிடிக்கும்படி நேரிடும். இவ்விதம் கதையை விரிவாக வளர்த்து எழுதுவதிலும் இடையே சேரும் விஷங்களை ஆழ்ந்த படிப்பினைகளாகவும், சிறந்த அநுபவங்களாகவும் உணர்த்திச் சென்று அவற்றைப் படிக்கும்போது மனம் சோர்வடையாதிருக்குமாறு செய்யும் சக்தி சிலருக்கு இயற்கையாகவே அமைந்துள்ளது. உதாரணமாக, ஜான்ஸன் பண்டிதர் எழுதிய 'ராஸிலஸ்' என்ற கதையில் கற்பனை வெகு கொஞ்சமே. ஆயினு மென்ன? நூல் முற்றிலும் பாவிச் சென்றுள்ள ஆழ்ந்த வியாக்கியானங்களின் அருமையானது அக் கதைக்கு ஆயிரம் முத்தங்கள் கொடுக்கும்படியாக இருக்கின்றது. எத்தனை முறைபடிப்பினும் புது விஷயமாகவே தோன்றி மனம் சலிப்பதே யில்லை. இவ்வகையான சாதுரிய விசேஷம் வாய்க்கப் பெறாதவர்கள் கற்பனைச் சரக்கைக் கொஞ்சமாகவைத்துப் புஸ்தகம் பெரிதாவதற்காக என்னென்னவோ விஷயங்களை யெல்லாம் சேர்த்துக் கதையை வளர்த்திவிடுகிறார்கள். அவற்றை வாசிப்பதற்கே பிரியமற்று, அவ்விதம் வாசிக்கப் புகினும் கதையில் வீணே வளருகின்ற பக்கங்களைப் பல பக்கங்களுக்குத் தள்ளிக் கதா கற்பனைகளை மட்டும் படித்துவிட்டுப் புஸ்தகத்தை மூடிவிடும்படியாகிறது. உலகம் பலவிதம்.

---

ஒருவருடைய கடிதத்தை மதித்துத் தன்னால் அந்தக் காரியம் செய்வதற்கில்லாமையை வணக்கமாகத் தெரிவித்துக் கொண்டால், அதற்கு மறுபடியும் பதில் எழுதி எப்படியும் அந்தக் காரியத்தைச் செய்து தரும்படி வற்புறுத்துகிறார். அதற்குப் பதில் எழுதாமலே யிருந்து விட்டால் அவரும் மௌனமாகிவிட அத்துடன் அவ்விஷயமும் முடிகிறது. முதலிலேயே பதில் தராது மௌனமாயிருந்தால் அப்போதே இது முடிந்திருக்கலாம் போலும்.




## கண்-மனம்-புத்தி.

**கண்:**—மனமே! உன்னுடைய தயவு இல்லையேல் எனக்கு இன்பமில்லை. என் அருகே வா, என்னை விட்டுப் பிரியாதே.

**மனம்:**—கண்ணே! என்னுடைய தயவை ஏன் விரும்புகிறாய்? நீ தான் ஸகல இந்திரியங்களிலும் சிரேஷ்டமாய் விளங்குகிறாயே? எட்டினமட்டும் எதையும் பார்க்கும் வல்லமை உனக்கு உண்டு. நீயோ ஸ்தூலப் பொருள். நான் சூக்ஷ்மப் பொருள். உனக்கு ஒரு கெடுதியையும் வரவொட்டாமல் கடவுள் இமைகளை ஏற்படுத்தியிருக்கிறார். உனக்கு நோய் வந்தால் அதற்கு மதராவில் கண்ணாசுபத்திரி இருக்கிறது. இதைப்போல மற்ற இந்திரியங்களுக்கு ஆசுபத்திரி ஏற்பட்டிருக்கிறதா? மூக்காசுபத்திரி, செவியாசுபத்திரி முதலியன இல்லையே. ஆகவே, நீ மிகுந்த செல்வாக்குள்ளவன். அப்படிப்பட்ட உன்னத நிலையிலிருக்கும் உனக்கு என் தயவு எதற்காக? ஒருவேளை பரிகாஸம் பண்ணுகிறாயோ?

**கண்:**—இடிந்த சுவருக்கு முட்டு கொடுப்பதுபோல் ஊன் கண்ணாகிய எனக்கு இமையை ஏற்படுத்தியிருக்கிறார்கள். வைத்தியமும் செய்கிறார்கள். எத்தனை துஷ்டப் பயல்கள் "கண்ணைக் குத்துவேன்" என்கிறார்கள். "கண்ணைப் பாரடா குறவனாயிருக்கிறான், திருட்டுக் கண், காமக் கண், கபடக் கண், அவிசக் கண், நொள்ளைக் கண்" என்று மனிதர்கள் பலவாறாய் நிந்திக்கின்றனர். "ஐயோ! அவன் கண் பட்டுவிட்டால் அந்தப் பண்டம் அப்படியே அழுகிப் போய்விடுமே" என்று என்னையே கேவலப்படுத்துகிறார்கள். இவ்வளவு இழிந்த நிலையிலிருக்கும் நான் உன்னைப் பரிகாஸம் செய்வேனா? தவம் செய்வோர் என்னை மூடிக்கொண்டு உன்னைத் தானே தேடுகின்றனர். நீ எங்கு ஓடிச்சென்றாலும் வலிய இழுத்துப் பிடித்து உன்னைக் கொணர்ந்து இருதயத்தில் வைத்துப் பலவித யோகங்களைச் செய்கிறார்கள். பெரியோர்களுக்கு நான் அற்பனாயும்

---

முதல் மனைவி உயிருடன் இருக்கையிலேயே மதன்கணையிற் சிக்கி மற்றொருத்தியையும் விவாகம் செய்துகொள்ளுகிறார்கள். புதிதாக வந்தவளோ ஒரு குழந்தையைப் பெற்றுக் கண்மூடி விடுகிறாள். அவளோடு அக்குழந்தையும் கண்மூடி விட, மறுபடியும் பழய வாழ்வுக்கே திரும்புகிறார்கள். இது அக்கிரமத்துக்குக் கூலியா?

நீ பெரியவனாயும் காணப்படுகிறாய். நான் எட்டிய தூரத்திலிருப்பதை மட்டும் பார்க்கிறேன். நீ எட்டாத தூரத்திற்கும் தாவிப் போய்க் காண்கின்றாய். பகவானை நான் நாடினாற் பயனில்லையாம்; நீ அவரை யடைந்தால் தான் அவர் கிருபை செய்வாராம். உன் பெருமைக்கு நான் எம்மாத்திரம்?

மனம்:—நீ புகழ்வது கிடக்கட்டும். என் அவிவேகத்தைக் கேள். எதைக் கண்டாலும் விரும்புவது என் இயற்கை. ஒரு விஷயம் பின்னால் நன்மையைப் பயக்குமோ அல்லது தீமையை விளைக்குமோ என்று நான் கவனிக்கிறதில்லை. எது எந்த வேளைக்கு சுகமாய்த் தோன்றுகிறதோ அதுவே எனக்குப் பிரீதி. இதற்கு முன் காணாத ஒருவன்மீது அவனது அன்புக் கடிதங்களால் எவ்வளவோ பிரியம் வைக்கிறேன். பிறகு அவனே நேரில் வர, நீ அவனைக் காண்கின்றாய். உன் கண்ணுக்கு அவன் யோக்கியதை யற்றவனாகவோ, கபடனாகவோ, மோசக்காரனாகவோ, நம்பிக்கை வைப்பதற்குத் தகாதவனென்றோ படுகிறது. உடனே அவன் மீது வெறுப்பு கொள்கிறாய். உன் எண்ணத்தையே நானும் ஏற்று அவன் மீது கொண்ட பிரீதியினின்றும் விலகிக் கொள்கிறேன். இதனால் என்னைவிட நீயே பெரியவனாகிறாய். என்னை நீ விரும்புவதிலும், இன்னொருவரின் தயவு உனக்கு இருந்தால் வெகு நல்லது.

கண்:—உன்னைக் கேவலமாக எண்ணாதே. உன்னுடைய ஸ்நேகம் எனக்கு வெகு முக்கியம். ஏதேனும் ஒரு பொருளை நான் பார்த்து, நீ அந்த சமயம் வேறொரு பொருளை நோக்கினால் என் காரியம் வியர்த்தமாகிறது. நான் ஒன்றைப் பார்க்கும்போது நீயும் என்னுடன் சேர்ந்து அதை நோக்கினால்தான் தெளிவாக அறிய முடிகிறது. ஆகவே, உன்னை என்னுடன் இருக்குமாறு வேண்டிக் கொள்கிறேன். நீ இன்னொருவரைக் குறிப்பிட்டாயே அவர் யார்?

மனம்:—அவர் தான் "புத்தி" என்பவர். புத்தி இல்லாவிட்டால் மனுஷ்யனுக்கு உண்மையான சுகம் உண்டாகமாட்டாது. முன் யோசனையுடன் ஒரு காரியத்தில் என்னைப் பிரவேசிக்கச் செய்வது புத்தி தான். அவர் என்னை அடக்கி ஆளாவிட்டால் நான் அநியாயமாய்க் கெட்டு அங்குமிங்கும் அலைந்துகொண்டிருப்பேன். உதாரணமாக், நீ ஒரு புஸ்தகத்தைப் பார்க்கிறாய்; அப்பொழுது

---

இந்தியாவின் பூர்வீக ஆத்மார்த்த ஞானத்தைப் பெருக்குவதற்காகத் தம்முடைய சொந்த ஆத்ம அனுபவத்தைக் கொண்டுவருவதற்கு யார் இடமில்லை என்பார்? தம்முடைய சொந்த நடவடிக்கையால் ஞானத்தை அவர் புகட்ட வேண்டும். கட்டாயம் செய்யாமல் சொல்வதைக் கேட்க இஷ்ட முள்ளவர்களுக்கு (பாதிரிமார்கள்) தாம் தெரிந்துகொண்ட தத்துவங்களைப் போதிக்க வேண்டுமே யல்லாது தப்பான வழிகளைப் பின்பற்றி அவர்கள் நடக்கக் கூடாது.—மகாத்மாஜி.

நான் தெருவில் நடக்கும் சங்கதிகளில் நாட்டமாயிருந்தால், நீ யாது செய்வாய்? புஸ்தகத்திலுள்ள விஷயங்கள் ஒன்றேனும் அந்த சமயம் உனக்குப் புலப்படுமா? நான் உன்னோடு நேசமாயிருந்து அந்தப் புஸ்தகத்தைப் படிப்பதாகவே வைத்துக்கொள்வோம். அப்போதும் அதிலுள்ள விஷயங்கள் மிகுந்த பிரயோஜனத்தை விளக்குமென்று அறிவதற்கு என்னால் முடியாது. அது புத்தியின் காரியம். ஆகவே, கண்—மனம்—புத்தி ஆகிய நாம் மூவரும் நட்புடனிருந்து நல் விஷயங்களையே நாடிக் கீர்த்திபெறக் கடவோம்.

ஃ

குழந்தைகளே! இந்த ஸம்பாஷணையிலிருந்து என்ன அறிந்து கொண்டீர்கள்? ஒரு புஸ்தகத்தை வாசிக்கும்போதும், ஒரு காரியத்தைச் செய்யும்போதும் கண்—மனம்—புத்தி இம்மூன்றையும் அதில் செலுத்த வேண்டுமென்றும், அப்பொழுது தான் எதையும் நன்றாக அறியவும் கற்கவும் முடியுமென்றும் விளங்குகிறதல்லவா?

## இருவரும் மாறிவிடுவோமா?

என்மேல் நீ ஆத்திரம் கொள்வதெதற்கு? என்மீது கோள் புகார் கூறுவது எதற்கு? இவ்வளவும் இருவரும் சேர்ந்திருந்ததினால்தானே உண்டாயிற்று? இனி நான் சேரவில்லை. உன்னில் மயங்கிப் பிரியம் வைக்கவுமில்லை. தூரத்தில் அன்னியன்போல் இருந்துவிட முயலுகின்றேன். என்னிலிருந்து உன்னை விலக்கி வேற்றுமனித உருவமாய் விடுகின்றேன். அப்பொழுது சொந்தம் என்பது தொலைந்து போவதால் என்மீது ஆத்திரப்படவோ—கோபங் கொதிக்கவோ வழி எற்படாது. நீ உண்மையான மனிதனென்றும், அன்புகாட்டுவாயென்றும் நினைத்தே உன்னுடன் நேசித்தது. கபடக்களஞ்சியமா யுள்ளவர்களிடமிருந்து அன்பையும் நேசத்தையும் எதிர்பார்ப்பது பயனற்ற வேலையானதால், தெருவில் போகிற எத்தனையோ மனிதர்களுள் ஒருவனைப்போல நானும் இந்த நிமிஷமுதல் ஆகிவிட உறுதி கொண்டுவிட்டேன். நீயும் அப்படியே ஆகிவிடு. அதுதான் இருவரும் மனோசமாதானம் பெறும் வழி. இனி, நீ இந்த அன்னியனிடம் கோபமோ—ஆத்திரமோ எதுவும் காட்ட முடியாதன்றோ? இருவருக்கும்கடிதங்கள் இனிவது?இராது.

# கவித்துவம்.



மனிதனுடைய உள்ளுயிரைச்சென்று தீண்டுவதற்குக் கவிதையைப் போன்ற வஸ்து வேறெதுவும் உலகத்திலே கிடையாது. கவியிலே கூறப்பட்ட எண்ணங்கள் மனித இயற்கையோடு கலந்து போய் விடுகின்றன. தனக்குத் தெரியாமலே மனிதன் அவ்வெண்ணங்களின் அடிமையாய் விடுகின்றான். ஃ

ஆதியிலே, தமிழ்நாடு எல்லா விதங்களிலேயும் பெருமை கொண்டு விளங்கிய காலத்தில் தமிழ்க் கவிதை அதி ஸௌந்தர்யமாகத் தழைத்து விளங்கிற்று. பழங்காலத்துச் சிலப்பதிகாரம் என்ற ஒரு நூலை எடுத்துக் கொள்ளுவோம். அதிலே இருக்கும் கவிச் சுவையை நம்மால் வர்ணிக்க முடியாது. பிற்காலத்துத் தமிழ் நூல்களிலே செறிந்து கிடக்கும் பத்து விதமான குற்றங்களை அப்பெருங் கிரந்தத்திலே தேடித் தேடிப் பார்த்தாலும் அகப்படாது. எளிமை, இனிமை, ஆழமுடைமை என்ற குணங்களிலே சிலப்பதிகாரத்துக்கு மேற்பட்ட நூல் கிடையாது. படாடோபமான வீண் கற்பனைகள் அதிலில்லை. அக்காலத்திலே யிருந்த தமிழ்ச் சாதியாரின் வாழ்க்கை யழகுகளையும், எக்காலத்துமுள்ள இயற்கைப் பெரும்பொருள்களின் அழியாத அழகுகளையும் அந்நூலியற்றிய இளங்கோவடிகள் அனுபவித்து வரைந்திருக்கும் நயம் நிகரற்றதாகும். காவிரிப்பூம்பட்டினத்துத் தொழில் முறைகளை அவர் கோத்திருக்கும் நயம் ஒன்றே போதாதா? அவரது வரிப்பாடல்களின் இன்பம் சொல்லி முடியாது. இறுதியிலே, அந்நூல் கதாநாயகன் மனைவியாகிய கண்ணகி தனது கணவனுக்குக் கொலைத் தண்டனை விதித்த பாண்டியன் முன்னே சென்று வாது கூறிய இடம் கற்றோர்களுக்கு நல்லமுது தரும் பாற்கடல் போன்றதாகும். நிற்க, இது போன்ற புராதனப் பெரு நூல்கள் எத்தனையோ உண்மையான கவிதை நலம் பொருந்தி விளங்குகின்றன.

ஃ

இனி, நாயனார் திருக்குறளைப் பற்றிப் "போப்" என்ற தேசாந்தரத்துப் பண்டிதர் பேராவேசத்துடன் வியந்து கூறியிருப்பதை நாம் அறிய மாட்டோமா? கம்பரது திவ்ய கிரந்தத்தை நாம் புகழ்ச்சி செய்யப் போவது சூரியப் பிரகாசத்தைக் கண்ணுடையார் முன் விஸ்தரித்துப் பேசுவது போன்ற குறும்புத் தொழிலாகும். ஷெல்லி, பைரன், வோர்ட்ஸ்வோர்த் முதலிய அற்புதமான ஆங்கிலேயப் புலவர்களின் காவியாமிருதத்திலே மூழ்கி யிருந்தவராகிய காலஞ்சென்ற ஸ்ரீ ராஜமய்யர் (கமலாம்பாள் சரித்திரம் எழுதியவர்) உலகத்துக் கவீசுவரர்களிடெல்லாம் கம்பரே முதன்மை கொண்டவரென்று அபிப்பிராயப் பட்டிருக்கிறார். விரிப்பிற் பெருகும். ஃ

---

ஒற்றுமை கெட்டதும் அசூயையும் துவேஷமும் தோன்றுகின்றது. ஒருவனுக்கு இவ்விரண்டும் உண்டானால் எதிராளியைக் கெடுக்க எத்தனிப்பான். மனம் கெட்டுவிட்ட பிறகு தெய்வம் எங்கே? வேதாந்தம் எங்கே?

பண்டைக் காலத்திலே இவ்வாறு உன்னத ஸ்திதியிலிருந்த தமிழ்க் கவிதை இப்போது என்ன நிலைமையிலிருக்கிறது? வார்த்தைகளினால் வீடு கட்டுவோர்கள், தேர் கட்டுவோர்கள், பின்னல் பின்னுபவர்கள், பழங்காலத்துக் கழிவுக் கருத்துகளைச் சுவையற்ற மொழிகளிலே கோத்து நீண்ட நூற்களெழுதித் தலை நோவுண்டாக்குபவர்கள், யாதொரு கருத்தும் விளங்காதபடியே பாட்டெழுதும் வித்துவான்கள், நிகண்டு முழுதையும் தலைகீழாகப் படித்து அதுவே கவித்திறமைக்குப் போது மென்று திருப்தி கொண்டிருப்பவர்கள் — என்பவர்களின் கையிலே தமிழ்க் கவிதை அகப்பட்டுக் கொண்டு உருமாறிப் போய் வருந்துகின்றது. தமிழ் வல்லோரனைவரும் இப்பரிதாபகரமான நிலைமையைக் கவனித்து இதனைச் சீர்திருத்துவதற்குரிய முயற்சிகள் செய்ய வேண்டுமென்று பிரார்த்தனை செய்து கொள்கிறோம். சிலர் எளிய நடையில் வரைவதாகப் பாடல்கள் இயற்றுவதில், அது ஒரு சாதாரண வசன நடையாக உளதேயன்றி கவிதா நயம் தென்படுவதே யில்லை. ஸ்ரீ பாரதியின் பாடல் எளிய நடை; ஸ்ரீ வேத நாயகம் பிள்ளையின் பெண்மதிமாலை யென்ற சிறுபாடல்களும் எளிய நடை. அவற்றிலுள்ள கவிச்சுவை நயம் இயம்பவும் கூடுமோ?

## கல்லா மடவாரின் காலப் போக்கு.

சமையல் வேலை முடிந்து புசிப்பும் ஆனபிறகு மத்தியானத்திலிருந்து மாலை வரையில் படியாத பெண்களுக்குப் பொழுது போவதில்லை. அன்னோர் தங்களை யொத்த படியாப் பெண்களுடன் கூடிக்கொண்டு ஊர்வம்பு பேசுவதிலும், பேன் குத்துவதிலும், பக்கத்து வீட்டிற்குப் போய்க் குந்துவதிலுமாகத் தங்களின் காலத்தைச் செலவிடுகின்றனர். ஒரு கூட்டம் பெண்களைக் கண்டால் அவர்களில் படித்த பெண்மணிகள் கிடைப்பது அபூர்வ மாகிறது. படித்துள்ளதாகச் சொல்லும் பெண்ணுக்கு ஒரு புஸ்தகத்தைப் படித்து விஷயம் அறிந்து ஆநந்திக்கிற அவ்வளவு சக்திக்குப் படிப்பு வராமலிருப்பதே பெரும்பாலும் காணும் சங்கதி. ஆகவே, இந்தப் படித்த பெண்ணும் அந்த கல்லாத பெண்களின் கூட்டத்துடன் சேர்ந்து கொள்கிறாள். இக்கூட்டத்தில் தீய சுபாவங்கள் பெருகுவதைத் தவிர நலம் விளைவதில்லை. கல்லாமை யென்னும் மகா கொடிய விஷம் அந்தோ! ஒரு புனிதமான ஸ்திரீ ஜென்மத்தைப் பாழாக்கி விடுகின்றது.

அன்பற்றவர்களிடம்தான் வேற்று முகம் அதிகமாய்க் காணலாம். ஒரு குடும்பத்தில் எல்லோரும் தன்மீது அன்புள்ளவர்களாகார். ஒருவர் இருவரே அன்பினராதல் கூடும். பலர் உள்ளேயொன்று; வெளியே ஒன்று!

# "அமிர்த"த்தின் ஆநந்தம்.



இன்று பதினேழாந் தேதி யல்லவா? அமிர்த குணபோதினி வரும் நாளன்றோ? ஒருக்கால் இன்று தவறினல் நாளைவருவது நிச்சயம். ஆம், அப்பொழுது நமக்கு நல்ல விருந்து. ஒரு மணி நேரத்திற்குக் குறையாது சம்பூர்ணமாகச் சாப்பிடலாம்.

ஃ

என் சகோதரிகள் இருவருக்கும் தமிழில் மிக்க ஆசை. அதிலும் 'அமிர்த' மெனில் நாவில் தண்ணீர் ஊறும். எவ்வேலையிருப்பினும் அதைப்படித்து முடித்த பின்பே வீட்டு வேலையைச் செய்யத் தொடங்குவர். 17-18-தேதிகளில் தபால்காரன் வந்து 'போஸ்ட்' எனில், இருவரும் தத்தம் வேலையை விட்டு ஓடி வந்து "நான் முன்னே-நீ முன்னே" என்பதாக வாங்குவர். எவர் வாங்குகிறார்களோ அவரே முதலில் படித்து முடிப்பார்கள்.

ஃ

ஏப்ரல் மாதம் பிறந்து பதினறு தேதிகள் கழிந்தன. பதினேழாந் தேதி காலையில் என்னுடைய அக்கா நான் படித்திருந்த அறையுட் புகுந்து "இன்று நமக்கொன்று வரப் போகிறது—அதுவும் தபாலில் வரப்போகிறது-என்ன சொல் பார்ப்போம்?" என்ருர். நான் ஏதேதோ யோசித்துப் பார்த்தேன். நினைப்புக்கு வரவில்லை. அன்று பார்ஸலில் பழம் வருமென்று என் சிற்றப்பார் சொன்னது ஞாபகத்திற்கு வர, "ஆம்-தெரியும் அது மாம்பழம்" என்றேன். அதற்குள் என் சகோதரியார் "மூண்டமே, நான் தபாலில் வருவது என்று சொன்னேன், நீ ரயிலில் வருவதைச் சொல்கிருயே" என்று இடித்துரைத்தார். நான் கோபித்துக் கொள்ளவில்லை. யோசித்தேன். என் மேஜை மேல் முந்திய மாதத்து 'அமிர்த' மிருந்தது. உடனே காலண்டரை நோக்க தேதி 17-ஆக இருக்கவே தெரிந்து கொண்டேன். "தெரியும்—தெரியும் அந்தப் பழம். அமிர்த குணபோதினி யன்றோ" என, "ஆம் ஆம்" என்ருர் என் சகோதரியார்.

ஃ

அன்று மாலை மணி நான்கிலிருந்து தெரு நடையை யொட்டினற்போலிருக்கும் அறையிலுள்ள கட்டிலில் படுத்துக் கொண்டு ஜன்னலை நோக்கியபடி இருந்தார். அவர் எதிர்நோக்குவதை நான் கண்டு கொண்டேன், உடனே தெருத் திண்ணையில் கையில் ஒரு புத்தகத்துடன் உட்கார்ந்து கொண்டேன். ஒரு மணி நேரம் சென்று தபால்காரன் "அமிர்த"த்தைக் கையில் நீட்டியவாறே எடுத்துவர, நான் வாங்கிக் கொண்டு, உள்ளே எடுத்துச் சென்ருல் எங்கு என் சகோதரிகள் பிடுங்கிக் கொள்ளப் போகிருர்களோவென்று தெருத்திண்ணையிலேயே படிக்க ஆரம்பித்தேன். தபால்காரன் வந்ததும் வெகு அவசர

---

தன்னைப் போலவே வெளிப்பேச்சாகத் தித்திக்கப் பேசித் தனக்கு செய்ய அவன் ஆரம்பித்துக் கொண்டா னென்று அறிகிறபோது, இனி அவனை ஒருபோதும் ஏமாற்ற முடியாதென்று தெரிந்து கொள்ளுகிறன்.

மாக என் சகோதரி அங்கு எழுந்து வர, நான் வாங்கிக் கொண்டதைப் பார்க்க, "நீயா வாங்கிக் கொண்டாய்; நான் அதற்காக அல்லவோ காத்திருந்தேன்" என்றார். நான் சிரித்துக் கொண்டே உள்ளே இருக்கும் விஷயத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும்போது, மெதுவாக எனக்குத் தெரியாமல் எட்டி சஞ்சிகையை பிடுங்கிக்கொண்டு போய்விட்டார். நான் அவர் பின்னால் சென்று "அக்கா-எனக்கு வேண்டாம். யார் யார் என்னென்ன எழுதி இருக்கிறார்கள் என்பதை மாத்திரம் நீ படித்துக் கூறு; நான் போய் விடுகிறேன்" என்றேன். அவர் படிக்க ஆரம்பித்தார். இதற்குள் மற்றொரு சகோதரி "சஞ்சிகை வந்து விட்டதா" என்று ஆவலுடன் கேட்டுக் கொண்டே வந்தவர், அக்காவின் கையிலிருந்ததை வெடுக்கென்று பற்றி இழுத்துக் கொண்டு ஓடித் தன்னறையுட் புகுந்து தாளிட்டுக்கொண்டார். அக்காவுக்குக் கோபம் தான். "பார்த்தாயா சீதா செய்ததை? அது மெதுவாகப் படிக்கும். நான் 'பர பர' வென்று வாசித்து ஒரு மணி நேரத்தில் கொடுத்துவிடுவேன். சரி-சரி-அடுத்த மாதம் முதற்கொண்டு என் பேருக்கு மற்றொன்று வரவழைக்கப் போகிறேன்" என்று சொன்னார். எனக்குச் சிரிப்பு தான். "என் அக்கா, அவரவர்கள் இம்மாதிரி ஆவலாக இருந்து முதலில் படிக்க விரும்பினால் முடியுமா? யாராவது விட்டுத் தந்தால் தானே? சஞ்சிகை எங்கு போய்விடப் போகிறது? வீட்டில் தானே இருக்கப் போகிறது. மெதுவாகப் படித்தால் போயிற்று" என்று சொன்னேன். ஏழு மணிக்குப் பிறகு சீதாதேவி சஞ்சிகையைப் படித்து விட்டுத் தர, என் அக்கா பின் வாசித்து மணி பத்துக்குத் தர, நான் அதன் பின்பே படிக்க ஆரம்பித்தேன். "அமிர்த குணபோதினி"யை இவ்வாறாக நாங்கள் பெற்றுச் சுவைக்கின்றோம். எங்களைப் போன்றே நீங்களும் "அமிர்தினி"யைக் கண்டு ஆநந்திக்கிறீர்களென்று நம்புகிறோம்.

ஒரு சகோதரன்.

[காலணா பக்ஷணத்தை அரைமணி நேரம் ருசி பார்த்துச் சப்பிச் சப்பிப் புசிப்போரும் இருக்கிறார்கள். அதையே ஒரு நிமிஷத்தில் ருசியறியாது மென்றுதின்று விடுவோரும் இருக்கிறார்கள். அனுபவிக்கும் ருசி தெரிந்தவர்கட்கே ஆநந்தமாம். ப-ர்.]

## பிரிந்து மறந்த காதலன்.

என் பூர்ணேந்திரா! அறம், பொருள், இன்பம், வீடு—என்றறைந்திடும் நால்வழிக்குமுறைபடுமில்லாள் உன் நயனதாரா. பொறையினிற் பூமி போன்றாள். புகழுடைக் கற்பின் மிக்காள். குமுதவாய் மலரால் திருத்தமாக நாதா வென்றும், துரை யென்றும், நண்பவென்றும், ராஜா வென்றும் நவின்ற செல்வி. அவ்வுயர் அணங்கின் காதலெனும் பெருந்தளையிற் கட்டுண்டு களிபொங்கி நின்றாய் ஓர் காலந் தன்னில். ஆனால்——இப்போதோ!......... (ஆ. க. க.)






இன்று கூடிய நமது கடையில் "ஒருவனை நண்பனாகக்கொண்டு அவன் குணங்களை யறிவதை விட, விரோதியாகக் கொண்டு தெரிந்துகொள்ள முயலும் போது அதிகமான விவரங்கள் நமது கைக்குக் கிடைக்கின்றன" என்று தாண்டவக்கோன் கூறினார். உடனே அல்லா பிச்சை எழுந்தார். "ஆம் ஐயா, ஆம். இருவரும் வெகு அன்பாகிருர்கள். ஒருவருக் கொருவர் எவ்வளவோ வாத்ஸல்யத்துடனும் கடிதங்கள் எழுதிக்கொள்கிருர்கள். இவர் அவரைப் பற்றியும், அவர் இவரைப் பற்றியும் எவ்வளவோ உயரிய எண்ணங்களை வளர்க்கின்றனர். இடையே ஒரு சிறிய சங்கதி எட்டுகிறது. "அவர்" ஒரு பெரிய ரகசியக் குடியரென்றும், வாங்கின கடனைத் தராமலே ஏமாற்றுவதில் தீரரென்றும் இவருக்கு ஒருவன் கூறுகிருன். இதை அருகிலிருந்து கேட்ட மற்ருெருவன் அவருக்கு இவ் விஷயத்தை அறிவிக்கிருன். அதன்பேரில் அவருக்குக் கோபம் கொதித்து, தன்னைப் பற்றிய சங்கதிகள் இவருக்குத் தெரிந்துவிட்டதே யென்ற ஆத்திரத்துடன், அந்த "இவர்" சொல்வார் பேச்சை நம்புகிறவர் — எடுப்பார் கைக்குழந்தையாக இருப்பவர் என்று பலரிடத்திலும் சொல்லுகிருர். அந்த சங்கதி இவருக்கு எட்டுகிறது. தான் ஏதும் சொல்லாமல் பிறர் கூறியவற்றை மட்டும் கேட்டுக் கொண்ட அந்த அளவிலேயே நிற்கும்போது, தன்னைப்பற்றி இவ்வளவு ஆத்திர சிந்தையுடன் பலரிடத்தும் தூற்றிய "அவரது" சின்ன புத்தியையும் குறுகிய குணப்போக்கையும் நோக்கி வியஸனித்து, இந்தமட்டுக்கும் "அவரது" குணம் இவ்வளவு துரிதத்தில் தெரிந்து விட்டதே போதுமென்று மௌனமாய் விலகிக் கொள்கிருர். மனத்திலிருந்த அன்பும் புண்ணாகி விடுகின்றது. இவ்விதம் ஒருவருடைய குணங்களை யறிவதற்கு விரோதப் பட்ட நிலையே சுலபமான பாதை" என்று புகன்ருர். "ஒருவரைப்பற்றி நமக்குக் கிடைக்கிற நாம் எதிர் பாராத கடுகத்தனை செய்தியிலிருந்தே அவரது குணப்போக்கு முழுமையும் தெரிந்துகொள்ளும்படியாகி விடுகிறதென்றும், அப்போது அவரைப்பற்றி நாம் செய்கிற ஒரு முடிவு கடைசி வரைக்கும் சரியாகவே அமைந்து விடுகிறதென்றும்" தாண்டவக்கோன் சாற்றினுர். "தான் ஊரிலுள்ளவர்களை யெல்லாம் தூஷிக்கலாமாம்; தன்னைப்பற்றி ஒருவர் ஏதாவது பேசினுல் மட்டும் கோபம் பொங்கிக் கொள்கிறது; இந்தக் கோபம் மற்றவர்களைப்பற்றித் தான் பேசும்போது அந்த மற்றவர்கட்கும் உண்டாகாதா வென்று மட்டும் நினைத்துப் பார்ப்பதில்லை" யென்று தொந்திச் செட்டியார் நவின்ருர்.

ஃ

---

ஒரு நகையை விற்று விடுவது சுலபம். ஆனுல், அந்த நகையை நமது வாழ்நாளில் மறுபடியும் செய்யப் போகிருேமா, அதற்கான பணம் நமக்குச் சேருமா என்பது சந்தேகம் தான். விற்றது ஒரு நிமிஷத்தில் தீர்ந்துவிடும்.

“ தன் மனைவி அவளது பெட்டிக்குள்ளே என்னென்ன வைத்திருக்கிருளென்று ரகசியமாய் ஆராய்ந்து பார்ப்பது சில அற்ப ஆடவர்களின் வழக்கம் ” என்று ஒப்பாரிப்பிள்ளை சொன்னுர். உடனே மக்குப்பிள்ளை எழுந்தார். “ இதைப்பற்றி எனக்குக் கொஞ்சம் சொல்லத் தெரியும். ஒரு ஊரிலே ஒரு பத்திராசிரியர்; பத்திராசிரியரென்ருல் எழுதுவதற்கு எந்த சங்கதியைப் பிடிக்கலாம் என்று ஆராய்கிறவரென்பதே உண்மையான பொருள். பத்திராசிரியர் தன் மனைவியின் பெட்டியைச் சோதிக்கிற குண முள்ளவரல்லர். ஏதோ ஒன்றை எடுப்பதற்காக அவள் பெட்டியைத் திறந்த போது பல பக்கங்கள் எழுதிய ஒரு வியாசம் அவருக்குத் தென்பட்டது. அது தன் மனைவி தன் தாயாரால் படுகிற சிறுமைகளைப் பற்றியும், தன் தாய் அல்ப விஷயங்களுக்கெல்லாம் அவளைக் கண்டபடி தூஷிக்கும் தன்மையைப்பற்றியும் தினசரி அனுபவமாய் அன்றன்று பட்ட பாடுகளைத் தொடர்ச்சியாக எழுதி வைத்திருந்ததைக் கண்டார். பத்திரிகைக்கு நல்ல சாக்கு அகப்பட்டதென்று எடுத்துப் பத்திரிகையில் வேறு பெயருடன் வெளியிட்டு விட்டார். மற்ருேர் தடவை தன் மனைவியின் பெட்டியைத் திறந்தபோது இன்னுெரு வியாசம் அகப்பட்டது, அது அவள் சமீபத்தில் பறிகொடுத்த குழந்தையின் பிரிவாற்ருமையைப்பற்றிக் கல்லுங் கரைய வரைந்ததாயிருந்தது. அதையும் ரகசியமாக எடுத்துப் பத்திரிகையில் வெளியாக்கி விட்டார். இவ்விஷயம் வெகுநாளைக்குப் பிறகே மனைவிக்குத் தெரிந்தது. அவள் தான் எழுதிவைத்தது எங்கோ காணமற் போய்விட்டதென்று மட்டும் எண்ணியிருந்தாள். கபடத்தோடு பெட்டியை ஆராய்கிறதற்கென்று போகிற அற்ப குணம் வேறு; ஏதோ அவசரத்திற்காக ஒன்றை எடுக்க மனைவியின் பெட்டியைத் திறக்கப்போய், அங்கு சில புதிய சாமான்களைக் கண்டாலும் அதைப்பற்றித் தெரியாததுபோலவே இருந்து விடுகிற பெருந்தன்மை வேறு ” என்று மக்குப்பிள்ளை மொழிந்தார்.

ஃ

“ நண்பர்களில் இரண்டு வகையுண்டு ” என்று நல்லசாமி நவின்ருர். ஒரு வகையினர் காரியார்த்தமான நண்பர்கள். தங்களின் சங்கதிக்காகவே நம்மைச் சுற்றிக்கொண்டிருப்பவர்கள். தங்கள் சங்கதி முடிவதற்காக அந்த சமயத்தில் எது வேண்டுமானுலும் நமக்குக் கொண்டுவந்து கொடுப்பார்கள். அவ்விதம் வலியக் கொண்டுவந்து தந்து அதன் மூலம் தங்கள் காரியத்தில் அதிக சிரத்தையேற்படும்படி தூண்டுகிறவர்கள். இத்தகையோர் தங்கள் காரியம் முடிந்ததும் பிரிந்துபோய் பிறகு எட்டிப் பாராதவர்களாகி விடுவார்கள். மறுபடியும் அவர்களுக்கு இன்னுெரு காரியம் ஆகவேண்டி யிருக்கும்போது தான் நெருங்குவார்கள். இது ஒரு வகை. இன்னுெரு வகையாவது:— நம்மீதே உண்மையான அன்பு கொண்டு விட்டு, நம்மைப் பிரிந்து விலக முடியாதவர்களாய், காரியமில்லாவிட்டாலும் பேசிப் போவதற்காக அடிக்கடி வருகிறவர்கள். இத்தகையோரை நாம் எவ்வளவு விலக்கி

---

உபசரிக்கப்பெற்ற உத்தியோகஸ்தர் தம்மிடம் சொல்லிக் கொண்ட குறைகளைப்பற்றிக் கூடியவரையில் கவனிப்பதாய்த் தலையாட்டி விட்டு மறைகிருர். இதற்குமுன் தலையாட்டி மறைந்தவர்களில் இவரும் ஒருவராகச் சீக்கிரம் ஆகிவிடலாம். செய்த உபசார விருந்துகள் வீண் செலவே.

னும், நிந்தை செய்யினும், அந்த சமயத்தில் கோபத்துடன் சென்றுவிட்டு மறுநாள் நமது பக்கத்தில் மௌனமாய் வந்து குந்திக்கொள்வார்கள். நாம் எவ்வளவோ நிந்தையாகப் பேசி விலக்கி யிருந்தும், அதை எண்ணாமல் மறுபடியும் நமது அருகே வந்து உட்கார்ந்து கொண்டதைக் கவனிக்கையில், நமது கோபித்த உள்ளமும் மாறி அன்னோரிடம் அன்பாய் விடுகிறது. இத்தகையோர் கடைசிகாலம் வரையிலும் பிரிவு என்பதே யின்றிப் பல அவசர சமயங்களிலெல்லாம் நமக்குத் துணை மனுஷ்யர்களாகிறார்கள்'' என்று நல்லசாமி கூறினர். “இரண்டு நண்பர்களுக்குள் ஒருவர்மீதொருவர் எவ்வளவோ பிரியம் வைத்திருந்தாலும், க்ஷேமத்துக்குக் கூட ஒருவருக்கொருவர் கடிதங்கள் எழுதிக்கொள்ளாமல் அதில் சோம்பலும், தபால் செலவுக்குப் பின்னடைந்து லோபித்தனமும் காட்டுகிறது மூன்றாவது தினுசு'' என்று மூர்த்தி செட்டியார் புகன்றார். இத்துடன் நமது கடையும் பூர்த்தி பெற்றது.

‘பஹதூர்’ போன்வண்டு செட்டியார்.

## இறக்கும்பொழுதும் உன் செல்வம் இருந்ததா ?

---

அது தான் பெரிய கேள்வி. ஒருவன் தன் வாழ்க்கையின் ஆரம்பத்திலும் மத்தியிலும் எவ்வளவோ ஐசுவரிய போகங்களுடன் பரிமளித்திருக்கலாம். உயரிய வாகனுதிகளும், வீடும், நிலங்களும், ஆபரணங்களும் கொண்டிருக்கலாம். அவன் இறக்கும் கடைசி காலத்திலும் இந்தச் சொத்துகள் அவ்விதமே அழியாதிருந்து விருத்திகொண்டனவாவென்பதே வினு? எத்துணேயோபேர் ஸகல சொத்துக்களேயும் இழந்து கடன்களோடும் மரித்திருக்கிறார்கள். அநாதைகளாயும் இறந்திருக்கிறார்கள். ஒருவன் முதலிலும் இடையிலும் சொத்துகளோடிருப்பது பெரிதல்ல; இறக்குந்தறுவாயிலுங்கூட அந்தச் சொத்துக்களுடன் இன்னும் அதிக அபிவிர்த்தியோடும் இருப்பதே பெரிது. தரித்திரனாய் ஒருவன் மரிப்பானுகில் அவன் முன்னேய வாழ்வு எவ்வளவு உயர்ந்துள்ளதாயிருப்பினும் அங்கு பெருமையில்லே.

நகைகளேயே பிரதானமாக நினைத்து அதற்கு அப்பால் கணவர்களே மதிக்கிற பெண்களிடம் அலக்ஷிய சிந்தையே அதிகமாக வேரூன்றி யிருக்கும். அத்துடன் அவர்கள் வெறுங் கழுத்துக்காரிகளாகவே காலந்தள்ளவும் நேருகின்றது. ஏனெனில், அவர்களின் குணத்தை யறிந்த கணவன் அவர்களேப் பிரீதித்து நகைகள் செய்து போட விரும்பாததே. நம்பிக்கையின்மையும் வேறே!

---

பொழுது போக்குவதற்கு உதவும் வெட்டிப் பேச்சுகளில் வெறும் கற்பனு சக்தியைக்கொண்டு கூறப்பட்ட பொய் செய்திகளும் கலந்து கொள்கின்றன.

# இது நண்பர்கள் கொடுத்து நடத்தும் இல்லறம்.

1. கடவுள் உன் தூய்மையையும் உண்மை உழைப்பையும் நன்கறிந்திருக்கிறார். பிறகு எதிர்படும் பெரியதொரு நன்மைக்காக அவர் சற்று நிதானிக்கிறார். கடவுள் அனுப்பிய தூதர்கள் தான் உன்னுடைய இனிய நண்பர்கள்.

2. அன்பினர்களே! மறுபடியும் இந்த இல்லத்திற்கு வந்து ஆசீர்வதியுங்கள். உங்களை உபசரிப்பதில் எனக்கு எப்போதும் மிக்க ஆநந்தம். உறவினரைவிட நண்பர்களையே நான் மிக மேன்மையாக மதிக்கிறேன். உங்களின் நல்வரவானது எனக்கு மங்களத்தையும், பூரணமான மகிழ்ச்சியையும், ஆத்ம பரிசுத்தத்தையும் மேன்மேலும் கொடுக்கட்டும்.

3. ஆனால், உள்ளத்தில் அன்பு அற்றோ, துவேஷ சிந்தையுடனோ, குற்றமே நோக்குங் கண்களுடனோ, செல்வச் செருக்குடனோ, மனப்பரிசுத்தம் இன்றியோ, உண்மை இல்லாதவர்களாகவோ—வந்து என் ஹிருதயத்தை மாசு படுத்தி விடாதீர்கள். இன்று சிரித்து மிகக் குலாவும் நீங்கள் நாளைக்கு என் ஜன்ம விரோதிகளாய்விட வேண்டாம்.

4. உங்களை உபசரித்திராத தந்திரமான வாய் ஜாலக்கு உள்ளவனுக்குங் கூட ஒரு வேளை உபசரித்து அனுப்புங்கள். அதற்கு அடுத்த வேளை அவனுடைய குற்றமுள்ள நெஞ்சு உங்கள் வீட்டில் தங்குவதற்குச் சம்மதிக்காமலே, அவனைப் புறப்பட்டு விடும்படித் தூண்டி விடும். நீங்களும் உபசரித்த வேளைக்குப் பிறகு அவனைப்பற்றிக் கவலைப் படவேண்டியதில்லை. அவனுக்கு அவ்வளவு போதும்.

5. எவர் எது பேசினும் பேசுக; வையினும் வைதிடுக. நீங்கள் வாய் திறக்க வேண்டாம். மௌனம் உங்களுக்குப்பெரிய பலமாகும். துரோகிகள் செய்த துரோகங்களை வாய் நோவச் சொல்லி, உங்கள் வாயை ஏன் அசுத்தப்படுத்திக்கொள்கிறீர்கள்? உங்கள் கடமையைக் குறைவறப் புரிந்து மனதார இறைவனை வணங்கி அவ்வளவில் திர்ப்தியுறுக.

6. உங்களை எதிர்ப்பவர்களை ஒரு நொடிப் பொழுதில் நசுக்க உங்களுக்கு சக்தி யிருந்தால், அந்த சக்தியைக் காட்டாமலே சகித்துக் கொள்வது தான் பெருந்தன்மையாகும்.

7. உங்கள் சக்திக்கு மீறிய ஒன்றில் பின்னடைந்தால்- அது குற்றமுமல்ல, கேவலமுமல்ல. தந்திர வஞ்சகர்களிடம் என்றும் எச்சரிக்கையுடனே எது ஒன்றையும் வக்கீலிடம் ஆலோசித்து நடத்தி, விழித்த கண்ணாக இருங்கள்.




# இராஜ சந்திரன்

## அல்லது—மறைந்த கைதி.

### அத்தியாயம்—3.

அத்தை செய்த மரியாதையும், விவாகமும்.

(296-ம் பக்கத் தொடர்ச்சி.)

IV

கண்ணப்பன் யாதொரு பதிலும் பேசாமல், கமலவல்லியிடம் சென்று உடனே புறப்படும்படி சொன்னான். கமலவல்லி தன்சாமான்கள் அனைத்தையும் எடுத்துக்கொண்டு கண்ணப்பனுடன் புறப்பட்டு விட்டாள். கோவிந்த முதலியார் கமலவல்லிக்குத் தேறுதல் சொல்லி யனுப்பினார். அத்தைக்கும் பயணம் சொல்லிக் கொள்ளப்பார்க்கையில் அவள் கோபத்துடன் வெளியில் போய் விட்டதை யறிந்து மௌனமாய்வண்டி ஏறினாள். சாரதா விலாஸத்திற்கு வந்ததும் தன் தந்தையை நினைத்துக்கொண்டு துக்கித்தாள்.

ஃ

கண்ணப்பன் அதிக சந்தோஷமடைந்தவனாய் விவாகத்திற்கு நாள் நிச்சயித்து, பத்திரிகைகள் பிரசுரித்து கோவிந்த முதலியாருக்கு மனுப்பி விட்டான். இது சங்கதி கேள்விப்பட்ட எல்லோரும் இவர்களிருவர்களுக்கும் விவாகம் நடப்பதைப் பற்றி மிக்க சந்தோஷப் பட்டார்களெனினும், பலராமன் மாத்திரம் அதிக வருத்தமடைந்தான். கண்ணப்பன் தன்னை மணந்து கொள்ளவில்லையென்ற வருத்தம் கிருஷ்ணவேணிக்கிருந்தபோதிலும், அவள் கமலவல்லியை நேசித்து வந்தபடியால் மௌனமாகவே யிருந்தாள். விவாகத்தை சாரதா விலாசத்திலேயே நடத்த ஏற்பாடு செய்திருந்தபடியால் கண்ணப்பன் ஏராளமான பணம் செலவு செய்து அலங்கரித்து வைத்தான். சுகுணவதி சகல சிலவையும் கவனித்து வந்தாள். கோவிந்தர் எவ்வளவு கெஞ்சியும் கனகாம்புஜம் விவாகத்திற்கு வரமறுத்து விட்டாள். அவ்வூரிலுள்ள பிரபுக்களெல்லோரும் வந்து சூழ்ந்தார்கள். விவாகம் அதிக சிறப்பாகவே நடந்தேறியது. முன்னர் கண்ணப்பன் அனுப்பிவிட்ட ஆட்களை யெல்லாம் சாரதா விலாஸத்திற்கு மறுபடியும் அழைத்து வந்து, அவர்களுக்குத் தாராளமான சம்பளங்கள் கொடுத்துத் தன்னிடம் வேலைக்கு அமர்த்திக் கொண்டான். கமலா அதிக சந்தோஷத்துடன் சாரதா விலாஸத்தில் கண்ணப்பனுடன் சுகமாகக் காலத்தைக் கழித்து வந்தாள். சுகுணவதியும் கமலாவுடனே வசிப்பதானாள். கண்ணப்பன் தான் முன்பு வசித்து வந்த வீட்டை வாடகைக்கு விட்டு விட்டான்.

## அத்தியாயம்—4.

### மறைந்த சந்திரனின் உதயம்.



ஹைநன்ரீப்வ்ஸ என்பது பௌரிங்கிப் பேட்டைக்குச் சமீபத்திலுள்ள ஒரு சிறிய ஊர். இவ்விடத்தில் அதிக ஜன நெருக்க மின்மையால் தனவந்தர்களில் அநேகர் ஏராளமான இடங்களைச் சேர்த்துத் தங்களுக்குத் தேவையான விதமாகப் பங்களாக்கள் கட்டிக்கொண்டு சுகமாக வாழ்ந்து வந்தார்கள். அத்தகைய ஐசுவரிய ஸம்பன்னர்களில் [illegible]வாச முதலியார் என்பவர் ஒருவர். [illegible]வர் சபாபதி முதலியாரின் கூடப்பிறந்த தம்பி என்பது வாசகர்களுக்குத் தெரிந்திருக்கும். இவர் கண்டிராக்ட் உத்தியோகம் செய்து வந்ததுடன், அநேக வருஷகாலமாய் கௌரவ மாஜிஸ்திரேட்டாகவும் இருந்து வந்தார். இவர் சர்க்கார் உத்தியோகஸ்தர்களின் தாஸாநுதாஸராக நடந்து வந்தமையால் இவருக்கு அதிசீக்கிரத்தில் "ராவ்சாகிப்" பட்டம் கிடைத்தது. கௌரவப் பட்டம் கிடைத்த நாளிலிருந்து காங்கிரஸ் சபையின் அங்கத்தினரா யிருந்ததிலிருந்து விலகிக் கொண்டார். மகாத்மாவின் ஒத்துழையாமை காலத்தில் அதைப் பழித்துப் பேசி ஸர்க்கார் உத்தியோகஸ்தர்களின் பக்கமாக இருந்து வந்தார். இவ்வாறுக வெல்லாம் தான் நடந்து கொண்டால் சீக்கிரம், "ராவ்சாகிப்" பட்டத்திலிருந்து, "ராவ்பகதூர்" பட்டத்துக்கு உயர்ந்து, அதன்பின் "ராய் பகதூர்" பட்டத்தையும், "திவான் பகதூர்" பட்டத்தையும், கடைசியில் ஸர் பட்டத்தையும் தொடர்ச்சியாகப் பெற்றுப் பெருமை யடையலாமென எண்ணினர். தமது மாஜிஸ்திரேட் உத்தியோகத்தில் சட்டத்தை முக்கியமாய்க் கவனிப்பாரே யன்றி, அத்துடன் காட்டவேண்டிய கருணையைச் சிறிதும் நினையார். சட்டத்தில் எவ்வளவு வரையில் உயர்ந்த தண்டனையைக் குறிப்பிட் டிருக்கிறதோ அந்த அதிகமான சிக்ஷையையே விதிப்பார். வெகு கண்டிப்புள்ள மனிதர். முன்கோபமும் இவருக்கு மிகுதி. தமது பெயர் வெளியில் வியாபிக்கக் கூடிய விஷயங்களில் மட்டும் இவரது தான தர்மங்களும் நன்கொடைகளும் இருக்குமே யன்றி பக்கத்து வீட்டுக்காரனின் அறுந்த விரலுக்குக் கடுகத்தனை சுண்ணாம்புகூடத் தரார். இவரால் தண்டிக்கப்பட்டவர்களிற் பலரும் மேல் கோர்ட்டுக்கு அப்பீல் செய்யத் தவறுவதில்லை. இவர் ஒருவருஷம் தண்டித்திருந்தால் அப்பீல் கோர்ட்டில் இரண்டு மாத சிக்ஷையாக மாற்றப்பட்டோ அல்லது விடுதலை செய்யப்பட்டோ போகும். இவர் பத்து ரூபாய் அபராதம் விதித்தால் அப்பீலில் ஒரு ரூபாயாகக் குறைக்கப்பட்டுப் போகலாம். இவருடைய சங்கதிகள் இவ்வாறிருப்பினும், இவருடைய ஒழுக்கத்தைப்பற்றி ஒன்றும் குறை சொல்வதற்கில்லை. யோக்கியமும், நாணயமும், நம்பிக்கையுள்ள மனிதருமாகப் பொதுவாய் உத்தமராகவே இருந்தார். அவர் வீட்டில் அவர் வைத்ததே சட்டம். அவர் பேச்சுக்கு மறு பேச்சு இல்லை. கமலவல்லி மட்டும்

---

சோமுவின் ஆபத்து காலத்தில் ராமு ஜாடையாகத் தூரவிலகி நின்றிருந்தால், ராமுவின் ஆபத்து நாளிலும் சோமு அப்படியே விலகிப்போய் விடுவான். எதுவும் பதிலுக்குப் பதிலே.

இவரை எதிர்த்துப பேசச் சுதந்திரம் பெற்றிருந்தாள். எப்போதாவது கமலவல்லி அவர் வீட்டுக்கு வருகையில் அவரது கோணல் வழிகளையும் கண்டிப்புத் தன்மையையும் பரிகவித்துப் பழிப்பாள். அதற்கு சீனுவாச முதலியார் கோபம் கொள்ளாமல் தன் தமயனாரின் குணஸ்வபாவங்கள் அப்படியே கமலவல்லியிடம் அமைந்திருப்பதை நோக்கிப் புன்னகை புரிவார். சீனுவாச முதலியார் அவ்வூரில் மிகவும் கௌரவஸ்தரானதாலும், சத்தியம் தவறாமலும், பாரபட்சமின்றியும், ஏழை—பிரபு என்ற தாரதம்மிய மின்றியும் நடப்பவரான படியாலும் அவரை அங்குள்ளவர்கள் மிக்க உயர்வாக மதித்து நேசித்து வந்தார்கள். இவர் ஓர் விசாலமான பங்களாவைக் கட்டிக்கொண்டு சுகமாக வாழ்ந்து வந்தார். இவருடைய பங்களாவைச் சுற்றிலும் ஏராளமான பூஞ்செடிகளும் பலனைத் தரத்தக்க பலவித விருக்ஷங்களும் அடர்ந்திருந்தன.

ஃ

இவருடைய பங்களாவின் பின்பக்கத்திலுள்ள அறையில் மிக்க ரூப ஸம்பன்னையான ஓர் ஸ்திரி அதிக காயலாவுடன் படுத்துக் கொண்டிருந்தாள். அவள் தான் இவருடைய மனைவியான அமராவதி. அவளுக்கு சில மனோவியாகூலங்களை முன்னிட்டு தேக அசவுக்கிய முண்டாகி யிருந்த படியால், ஏக்கம் பிடித்தவள் போல் அன்ன ஆகாரத்தையும் நித்திரையையும் வெறுத்துத் துன்பக்கடலில் மூழ்கிக் கிடந்தாள். ஃ

இவருக்கு சுமார் பதினைந்து வயதான ஓர் பெண்ணிருக்கிறாள். அவளுடைய பெயர் கிருஷ்ணவேணி. அவள் தன் தாயின் மனோவேதனையின் காரணத்தை யறிந்து அவளைத் தேற்றியபடியே அவளருகிலேயே யிருப்பாள். இவருக்கு சுமார் இருபத்தைந்து வயதுடைய ஓர் பிள்ளை யுண்டு. அவனுடைய பெயர் இராஜ சந்திரன். அவனைப்பற்றிப் பின்னால் கவனிப்போம். ஃ

இந்தப் பங்களாவில் கிருஷ்ண வேணி மாலைப்பொழுதில் தன் தாயாரருகே உட்கார்ந்து கொண்டிருந்தாள். இவள் இணையற்ற அழகுடனிருந்த போதிலும் கள்ளம் கபடற்றவளென்றே கூறலாம். கண்டிதமாகப் பேச முன் வருவாளே யொழிய புறங் கூறும் வழக்கமேயில்லை. நகைத்த முகத்துடனே யிருப்பாள். இவ்வழகைக் கண்ட பல ஸ்திரீகள் பொறாமை மிகுதியால் இவளை வெறுப்பதுண்டு. இவளுடைய தாயாரின் சிறிய தகப்பனாருடைய குமாரனே லாயர் கண்ணப்பன். தன் தாய் மாமனான கண்ணப்பனை விவாகம் செய்து கொள்ள எண்ணியிருந்த எண்ணம் நிறைவேறவில்லை. கண்ணப்பனோ இவளுடைய உட்கருத்தை அறியாதவனாய்த் தன் உடன்பிறந்த ஸகோதரிபோல் கருதி இவளிடம் அன்பு பாராட்டி வந்தான்.

ஃ

கிருஷ்ணவேணி தன் தாயாரின் அருகே உட்கார்ந் திருக்கையில், அவளுடைய தாய் அவளை அழைத்து, "என் நாக்கு வறண்டு போகிறது, கொஞ்சம் ஜலம் கொடு" என்றாள்.

கிருஷ்ணவேணி :—அம்மா வைத்தியர் அடிக்கடி ஜலம் கொடுக்க வேண்டாமென்று கூறவில்லையா? இப்போது தானே சற்று நேரத்துக்கு முன்பு ஜலம் கொடுத்தேன்.

அமராவதி :—ஆம், அதற்கு நான் என்ன செய்யட்டும். எனக்கு அதிக

உலக அறிவு பெற்றுக்கொள்ளுத லென்பது இன்னது கபடம் இன்னது யதார்த்தம் என்று நன்கு உணர்ந்து கொள்ளுதலே.

தாகமா யிருக்கிறதே. வைத்தியர் பல விதம் சொல்லுவார். அவர் நோயாளி யின் அவஸ்தையைப்பட்டிருக்கிருரா? என் உபாதை எனக்குத் தெரியும். உடனே ஜலம் கொண்டுவா.

என்ருள். கிருஷ்வேணி வேக மாகச் சென்று அதிக சூடான காப்பி கொண்டு வந்து கொடுத்தாள். அதை யவள் குடித்துக்கொண்டே யிருக்கை யில் வெளிச்சென்றிருந்த சீனிவாச முதலியார் வீடுவந்து சேர்ந்து தன் மனைவியை நோக்கி, இப்போது உனக்கு உடம்பு எப்படி யிருக்கிறது என்ருர். அவள் குணமில்லாமல் பழையபடிதானிருக்கிறது; எழுந்து நடக்க சக்தியில்லை; ஆகாரத்தின்மீது விருப்பமில்லை யென்ருள். "உன் ஆயு ளுள்ளவரையில் நீ இப்படித்தான் அவதிப்பட்டிருப்பாய்; அவனைப்பற்றி நீ விசனப்பட்டுக்கொண்டு அதே ஏக்கமாக இருந்தால் உடம்பு கெடாதா? உனக்கு நான் எத்தனை புத்தி சொன்னாலும் நீ கேட்பதே யில்லை. அத்தகைய பிள்ளை யிருப் பதைவிட இறந்துவிட்டால் நல்ல தென்றல்லவோ எண்ணவேண்டும். நான் இது வரையில் இவ் வூரில் அதிக கௌரவமாக வாழ்ந்து வந்தேன். துஷ்டனுகிய பிள்ளை பிறந்து என் பெயரைக் கெடுத்து விட்டான்" என்று கோபமாகக் கூறி ஞர். இதைக்கேட்ட கிருஷ்ணவேணி யும் அவள் தாயும் துக்கசாகரத்தில் மூழ்கினுர்கள். அவளுடைய தாய் விசனத்தைச் சகிக்கமாட்டாமல் முத லியாருக்குத் தெரியாமல் கண்ணீர் விட்டழுதாள். அப்பால் முதலியார் காப்பியுண்டு வெளியில் புறப்பட்டுப் போய்விட்டார்.

அவர் போய்விட்டபின் கிருஷ்ண வேணி தன் தாயை நோக்கி, "அம்மா நீ ஏன் நோயை வளர்த்துக்கொள்ளு கிருய்? எந்தெந்த காலத்தில் எந் தெந்த கஷ்டங்கள் அனுபவிக்க வேண் டுமோ அவற்றையெல்லாம் அனுபவித் தன்றே தீரவேண்டும். வரும் விதி வாராமல் நிற்குமா"" என்ருள். ஐயோ நானென்னசெய்யட்டும், ஒரே பிள்ளை யாயிற்றே! அவனைவிட்டுப் பிரிந்தபின் எனக்கு விசனமுண்டாய்விட்டதே, நான் எப்படி சகிப்பேன் என்று கதறினுள். அதற்குள்ளாக அவளுக்குக் குளிர்ஜுரம் வந்துவிட்டது. கிருஷ் ணவேணி அவளைப் படுக்கவைத்துக் கம்பளியால் நன்ருகப் போர்த்து விட்டு, புறக்கடை வாயிற்படியண்டை நின்று தோட்டத்தைக் கவனித்துக் கொண்டிருந்தாள்.

ஃ

அச்சமயம் தோட்டத்திலுள்ள பாதை வழியாக அதிக தூரத்தில் யாரோ ஒருவன் நடந்துவருவதைக் கண்டதும் ஆச்சர்யமுற்றுக் கவனிக்க லானுள். அவ்வுருவம் இவளைப் பார்த்ததும் சிரித்த முகத்துடனே பாதையின் ஓரத்திலுள்ள செடிகளின் மறைவாக நடந்து இவளுக்குச் சமீப மாக வருவதைக்கண்டு பயமடைந்து அசையாமல் நின்ருள். அவ்வுருவம் இவளுக்கு சுமார் ஐம்பதடி தூரத்தி லிருந்த ஓர் பலாமரத்தின்கீழ் நின்று கொண்டே இவளைச் சைகை காட்டி யழைத்தது. இதென்ன விந்தை, நம்தோட்டத்து மதிலைத்தாண்டி உள் நுழைந்தும் நம்மைக் கண்டஞ்சிப் போகாமல் நம்மருகே வந்து சைகை காட்டி யழைப்பவன் யாராயிருக்கக்

---

நம்முடைய விரோதிகள் என்போ ரெல்லாம் நம்மிடம் நன்ருகப் புசித்து நமது செலவில் தங்கள் காரியங்களை முடித்துக் கொண்டவர்கள் தான்! இவர் களுக்கு உழைத்தது நாம் பூர்வம் பட்ட கடன் போலும்! விதியின்செயல்.

கூடும்? இவன் கள்வனல்ல, கள்வனாகில் நம்மைக் கண்டஞ்சுவனல்லவா, அல்லது நமக்கு ஏதாவது கெடுதி செய்யவந்தவனுமல்ல; ஏனெனில் இவன் நகைத்த முகத்துடனே ஓர் குடியான வாலிபன்போல் காணப்படுகிறான். இவனிடம் நமக்குப் பிரியமானவர்கள் ஏதாவது சங்கதி சொல்லியனுப்பியிருக்கக்கூடும் என வெண்ணி கண்ணிமை கொட்டாமல் கவனித்தாள். அவ்வுருவம் புன்சிரிப்புடனே கைகாட்டி இவளை யழைத்தது. இவள் தைரியமாக நடந்து சென்று அவ்வுருவத்தினெதிரே நின்றாள். இவளைக் கண்டதும் அவ்வுருவம் பல்லைக் காட்டிச் சிரித்தபடியே "கிருஷ்ணவேணி, நான் இதற்குமுன் இரண்டு நாள் இத்தோட்டத்தில் வந்து அதிக நேரம் காத்துக்கொண்டிருந்தேன். நீ வரவேயில்லை. அதற்குள் தந்தையைக் கண்டதும் சந்தடி செய்யாமல் மதிலைத் தாண்டிப் போய்விட்டேன். இப்போது என்னைப்பற்றி உலகம் என்ன கூறுகிறது"................ என்றான். இவனுடைய குரலொலியைக் கேட்டதும் தன் அண்ணனாகிய இராஜசந்திரனென அறிந்துகொண்ட கிருஷ்ணவேணி ஆனந்த பாஷ்பம் ஆறாய்ப்பெருக்கி, அவனைக் கட்டிக்கொண்டழுதபடியே அண்ணா, நீ இப்போது எங்கே இருக்கிறாய், ஐயோ! உன் தலைவிதி இப்படியாய் விட்டதே. நீ இங்கு வந்து எவ்வளவு நேரமாகிறது என்றாள்.

நான் இப்போது உருகத்தில் (Oorgaum) பொன்சுரங்கத்தில்வேலை செய்து கொண்டிருக்கிறேன். சற்று நேரத்திற்கு முன் தான் உன்னைக் காண வந்தேன். அப்பா வீட்டிலிருக்கிறாரா? அவரைக் கண்டால் எனக்கு எமனைக் கண்டது போல் குலை நடுங்கிறது என்றான்.

இப்போது அப்பா வீட்டிலில்லை. அவர் வெளியில் போயிருக்கிறார். அம்மாளுக்கு உன் ஞாபகமே பெரிதாகி வினைமேலிட்டால் பாயும் படுக்கையுமாகவே யிருக்கிறார் என்றாள் கிருஷ்ணவேணி. இதைக் கேட்டதும் வைத்தியனாதனுக்கு அதிக விசனமுண்டாகி, நான் இப்போது அம்மாளைப் பார்க்க உள்ளே வரட்டுமா என்றான்.

ஆ, ஆ, வேண்டாம், வேண்டாம், மணியாய் விட்டது. நீ தாயைக் கண்டால் அவள் உன்னைவிட்டுப் பிரிய மனமில்லாமலிருப்பாள். அப்பா வந்துவிட்டால் உனக்கு ஆபத்தாய் முடியும். நீ இங்கு வந்திருப்பதை யாராவது கண்டால் ஐயோ, உன் பிராணனுக்கே மோசமாய் முடியுமே என்றாள்.

ஆம். ஆம், தூக்குமரம் இப்போது என் வரவை யெதிர்பார்க்கிறதென யானறிந்து ஒருவர் கைக்கும் அகப்படாமல் ஓர் கூலியாளைப்போல் வேடம் பூண்டுத் திரிகிறேன், என்றான். நீ இத்தனை நாளாக உருகத்தில் தானாயிருந்தாய் என்று கிருஷ்ணவேணி கேட்டாள்.

ஆம், ஆம், நான் வீட்டை விட்டுச் சென்றது முதல் சுரங்கத்தில் வேலை செய்துகொண்டு உருகத்திலேயே ஓர் குடிசையில் இன்னொரு கூலிக்காரனுடன் வசித்து வருகிறேன். நான் எங்கும் வெளிச்

---

எவ்வளவோ பட்டுப் பட்டு மோசம் போனவர்களுங்கூட, பிறகு இன்னொரிடத்தை ஆசையாய் நம்பி ஆகாசக்கோட்டை கட்டுகிறார்கள். அதன் முடிவு எப்படியோ?

செல்வதே யில்லை. யாரிடமும் தாராளமாகப் பேசுவதே யில்லை யாதலால் யாரும் என்னை இதுகாறும் கண்டுகொள்ளவில்லை. நான் குற்ற வாளியாகாமல் வீட்டிலிருப்பேனாகில் எவ்வளவோ சந்தோஷமாக யிருப் பதுமன்றித் தைரியமாகவும் வெளிச் செல்வேன். என் கஷ்டகாலம் தலை மறைவாகத் திரிய நேரிட்டுவிட்டது. இதுவும் நான் பூர்வகாலத்தில் செய்த கர்மத்தின் பலன். இப்போது எனக்கு தினம் எட்டணா கூலி கொடுக்கிறார் கள். அதில் ஓர் ஏழைக் குடியானவ னைப்போல் காலத்தைக் கழித்துவருகி றேன். எனக்குப் படுத்துக்கொள்ள மெத்தை முதலியன கிடையாது. பிணத்தைப்போல் ஓர் பொத்தல் பாயின்மீது படுத்துப் புரள்கிறேன். இராக்காலத்தில் சுகமான நித்திரையே யில்லை. என் கதியை நினைத்து நினைத்து வாடுகிறேன் என்று கூறிக் கண்ணீர்விட்டழுதான். இவனுடைய நிலைமையினைக்கண்ட மிகவும் இரக்க மான நெஞ்சினையுடைய குற்றமற்ற கன்னிகையாகிய கிருஷ்ணவேணி மனந்தாளாமல் கண்ணீர் விட்டழுத படியே, அண்ணா நீ ஏன் விசனப்படுகி றாய், நீ முன்பின் யோசியாமல் அக் காரியத்தைச் செய்தாய், கோபமிகுதி யால் புத்தி ஸ்வாதீனமின்றி செய்து விட்டிருப்பாயென நாங்களெல்லோ ரும் நினைக்கிறோம் என்றாள். இதைக் கேட்டதும் இராஜசந்திரன் ஆத்திரத் துடன் "ஐயோ தெய்வமே, என்னரு மைத் தங்கையாகி, என்னை முழுமன துடன் நேசிக்கும் நீயும், இம்மாதிரி கூறலாமா? நான் அக்காரியத்தைச் செய்யவேயில்லை, எனக்கு அதைப் பற்றி ஒன்றுமே தெரியாது என்றான். அப்போது,

கிருஷ்ணவேணி :—அண்ணா, இனிமேல் நீ மறுத்துக் கூறுவதால் பிரயோசனமேயில்லை. ஊர்முழுதும் நீயே அக்காரியத்தைச்செய்தவனென நம்பியிருக்கிறார்கள் என்றாள்.

இராஜசந்திரன் :—நான் உண்மை யைச் சொல்லுகிறேன். கடவுளின் மீதாணைப்படி யான் அக்காரியத்தைச் செய்யவேயில்லை. அம்மனிதன் கொல்லப்படும் காலத்தில் நான் அவ் விடத்தில் இல்லவேயில்லை, என்றான்.

இதைக்கேட்டதும் கிருஷ்ண வேணி திடுக்கிட்டமனதுடன் ஆச்சர்ய மடைந்தவளாகி மோவாய்க்கட்டை யின்மீது விரலை வைத்து அதிசயித்த படியே, சிவ சிவா, நீ ஏன் கடவுளின் மீது ஆணையிடவேண்டும். உண்மை யில் நீ கொலை செய்யாமலிருந்தால் வேறு யார்தான் செய்திருப்பார்கள். எதிராஜன் செய்திருப்பானா? என்று கேட்டாள்.

சே, சே, அவன் என்னைப்போல் குற்றமற்றவன். அவனுக்கும் நடந்த கொலைக்கும் யாதொரு சம்பந்தமுமே யில்லை. கொலை நடந்த சமயத்தில் அவனை நான் வெளியில் பார்த்தேன். அவர்களிருவரும் வழக்கம்போல் தோட்டத்தில் உலாவிக்கொண்டிருந் தார்கள்.

கிருஷ்ணவேணி :—அண்ணா, நீ போனநாள்முதல் அம்மா கணக்கில் லாத துர்க்கனவுகள் கண்டார்களாம், அவற்றிலெல்லாம் எதிராஜன்தான் கொலையாளியாகக்காணப்படுகிறானாம்.

இராஜசந்திரன் :—அது நம்பத் தகுந்ததல்ல, எதிராஜன் கொலை விஷ யத்தில் சம்பந்தப்படவேயில்லை.

---

அந்த மனுஷ்யன் யோக்கியமானவன் என்று நம்பும்போது, அதே சமயம் அவன் இதற்கு முன்பு பிறரிடம் செய்த அநியாயமும் நம்பிக்கைத் துரோகமு மான காரியங்கள் கண்ணெதிரே வந்து நின்று ஒரு கலக்கு கலக்குகின்றதாம்!

கிருஷ்ணவேணி :—நீ அக்கொலை விஷயத்தில் சம்பந்தப்படவில்லையா?

இராஜசந்திரன் :—அக்கொலை நடந்த சமயத்தில் நான் அவ்வீட்டிலில்லவேயில்லை, இது சத்தியம்..... அக்கொலையைச் செய்தவன் தங்கவேலு............என்று சொல்லிக் கொண்டேயிருக்கையில் புத்திகூர்மையுடையவளாகிய கிருஷ்ணவேணி அதிக ஆத்திரத்துடன் தங்கவேலா, அவன் யார் என்று கேட்டாள்.

அவன் யாரோ எனக்குத் தெரியாது. அவனுக்கும் எனக்கும் சிநேகமில்லை. அவனை உதைக்கவேண்டுமென்று நான் எண்ணியிருந்தேன் என்று இராஜசந்திரன் கூறினன். அப்போது,

கிருஷ்ணவேணி :—ஏன்? ஏன்? என்றாள்.

இராஜசந்திரன் :—ஏனெனில் நான் மணந்துகொள்ள விரும்பிய அபிராமியை அவன் காதலித்து வந்தான்.

கிருஷ்ணவேணி:—நீ இந்த விரோதத்தை முன்னிட்டு அவன்மீது குற்றம்சாட்ட நினைக்கிறாய், நீ என்ன செய்தபோதிலும், அதிகாரிகள், இக்கொலைக்கேசில் குற்றவாளி சீனிவாச முதலியாரின் மகனாகிய இராஜசந்திரனே யென்று தீர்மானம் செய்திருப்பதை மாற்ற இனி உன்னால் முடியாது என்றாள்.

இராஜ சந்திரன் :—அதனால்தான் நான் பயப்படுகிறேன். உன்னைப்போல் தைரியம் எனக்குக் கிடையாது. அப்பா என் மீது மிகவும் கோபமாயிருக்கிறாரா.

கிருஷ்ணவேணி :—அந்த அவதியை ஏன் கேட்கிறாய்? உன் பேரைச் சொன்னாலே அவருக்கு எங்குமில்லாக் கோபமும் ஆத்திரமும் பொங்கிவிடுகிறது. உன்னைப்பற்றிய விஷயம் ஒன்றும் வீட்டில் பேசக்கூடாதென்று அவர் வேலைக்காரர்களுக்கெல்லாம் திட்டம் செய்திருப்பதுமன்றி நீதான் குற்றவாளியென அதிகாரிகள் அபிப்பிராயப்பட்டதை யறிந்தபின் உன்னை எப்படியாவது தேடிக் கண்டுபிடித்து வரும்படி அநேகருக்குச் சொல்லியிருக்கிறார்.

இராஜசந்திரன் :— அப்படியாகில் என்னை யாராவது தேடித்திரிகிறார்களா?

கிருஷ்ணவேணி :—கேட்பானேன்? போலீஸார்எல்லாம் உன்னைத் தேடித் திரிகிறார்கள். நீ அவர்கள் வசமகப்பட்டுக்கொண்டால் அதோ கதிதான். தப்பிப் பிழைக்கும் மார்க்கமே கிடையாது. உன்மீது ஏற்பட்டிருக்கும் குற்றத்தை ருஜுப்படுத்த வேறு சாட்சிகள் தேவையேயில்லை, அப்பா ஒருவரே போதும். அவர் நீதான் உண்மைக் கொலையாளி என்று கண்டிப்பாய்ப் பலர் முன்னிலையில் கூறியிருக்கின்றார்.

இராஜசந்திரன் :—ஐயோ! தெய்வமே! இதற்கு நான் என்ன செய்யட்டும்? என்னைப் பெற்ற தந்தையே இவ்வாறிருந்தால் நான் யாரிடம் அண்டிப் பிழைக்கமுடியும்? என் பெரிய அப்பா சபாபதி முதலியார்

---

அவன் முன்போலில்லை, முற்றிலும் கெட்டு விட்டானென்று ஒருவன் குற்றம் பேசும்பொழுது, அவன் கெட்டது தன்னாலேயே யென்றும், தனது கபட குணங்களையும், சமயத்துக்குத் தக்கபடி பேசும் தந்திர மோசங்களையும் கண்டு அவனும் அதில் தேறிப் பழகித் தன்னைப் போலவே ஒரு வஞ்சகப் புள்ளியாய்விட்டா னென்றும் சிறிது நினைத்துப் பார்த்துக்கொள்ளக் கடவன்

சொன்னதுபோல, நம் தந்தை சட்டத்தைக் கவனிக்கிறரே யொழிய அத்துடன் காட்டவேண்டிய கருணையைக் கவனிக்கவில்லையே!

கிருஷ்ணவேணி:—அப்பா மிகவும் கண்டிதக்காரரல்லவா. அவர் தன் பிள்ளையாயிருந்தாலும் குற்றம் செய்தால் மனுச்சோழன்போல நீதி தவருமல் தண்டனைக்குள்ளாக்க முயல்வாரே யொழிய புத்திரவாஞ்சையினை முன்னிட்டு விடுதலை செய்விக்க முயல்வதென்பது அவரிடத்தில் நடக்காது.

இராஜசந்திரன்:—ஆம் அவருடைய குணம் எனக்குத் தெரியும்; ஆனல், அவர் நானே குற்றவாளியெனக் கருத நியாயமிருக்கிறது. ஏனெனில், நான் அபிராமியை மணக்க நினைத்து அவளுடைய வீட்டிற்கு இவருக்குத் தெரியாமல் அடிக்கடிபோய் வருவதை யறிந்து என்னைப் பலமுறை கண்டித்துப் புத்தி கூறி யிருக்கிறர். நான் அவர் பேச்சைக் கேளாமல் அபிராமியின்மீது காதலைச் செலுத்தி வந்தேன். கொலை நடந்த அன்று மாலை நான் என் துப்பாக்கியை யெடுத்துக்கொண்டு புறப்பட்டேன். அப்போது அவர் என்னைத் தடுத்து, நீ இப்போது எங்கே போகிருய், அபிராமியை யழைத்துக்கொண்டு தோட்டங்களுக்குப்போய் வேட்டையாடப் போகிருயா, இம்மாதிரியான விஷயங்களுக்கு நான் இடங்தரமாட்டேன். நீ இனி அபிராமியின் வீட்டிற்குப் போவதை நான் கண்டால் உனக்குப் பொல்லாங்காய் முடியுமென்று கூறினர். நான் ஒன்றும் பதில் கூருமல் அவர் வீட்டை விட்டுப்போகும் வரையில் என்னறையிலிருந்து அவர் போய்விட்ட பின் விரைவாக நடந்து அபிராமியிடம் சென்றேன்.

கிருஷ்ணவேணி:—கொலை நடந்த விடத்தில் உன்னுடைய துப்பாக்கி காணப்பட்டதாம், அதை யேன் நீ எடுத்துக்கொண்டு போனுய்?

இராஜசந்திரன்:—அபிராமியின் தந்தையாகிய குமாரசாமி முதலியார் புரு வேட்டையாட நினைத்து என் துப்பாக்கியை இரவல் கேட்டாராதலால் நான் அதை யெடுத்துக்கொண்டு போய்க் கொடுத்தேன். அத்துப்பாக்கியே என்மீது குற்றத்தை அதிகப்படுத்திவிட்டது. போன காரியத்தைப்பற்றி நினைப்பதில் விசனமுண்டாகிறதே தவிர வேறு பிரயோசனமில்லை. நான் வீட்டைவிட்டு இப்போது ஏறக்குறைய இரண்டு வருடமாகிறது. அப்பாவை நான் அடிக்கடி வழியில் சந்திக்கிறேன். அவரைக் கண்டதும் மறைவாகச் சென்றுவிடுகிறேன். உன்னையும் நான் சில தடவை ஷாப்புகளில் லாயர் கண்ணப்பனுடன் சாமான் வாங்குவதைப் பார்த்தேன். தைரியமாக முன் வந்து உன்னிடம் பேசப் பயந்து ஓடிப்போய்விட்டேன். இப்போது என்னருமைத் தாயைப் பார்க்கவேண்டுமென்ற ஆசையிருக்கிறது என்றதும்.........

கிருஷ்ணவேணி:—(வாயின் மீது கையை வைத்து.) ஐயோ! இப்போது வேண்டாம் வேண்டாம், நாழியாய் விட்டபடியால் அப்பா வந்துவிடுவார்கள். நீ நாளையதினம்மாலை 6-மணிக்கு மேல் வந்தால் அப்பா வெளியே போயிருப்பாராதலால் அப்போது சுமார் இரண்டுமணி நேரம் அம்மாவுடன் பேசலாம். இன்றையதினம் நீ வந்துபோனதை அம்மாவுக்கு நான் மறவாது கூறுகிறேன்.

(தொடரும்.)

---

எவனைப் பகைத்தோமோ அவனிடமே பிறகு எல்லா சொத்துக்களையும் ஒப்புவிக்க வேண்டியதாயும் ஒருகாலம் வருகின்றது.

# குடும்ப விநோதக் குறள்.

## 3. கோள் சொல்லுங் குணம்.

1. கொட்டும் விஷத்தேளுக் கொப்பாவார்; கோள்
கெட்டகுணத் தம்பிரான்களே. [சொல்லும்

2. கிண்டிக் கிளறிக் கெடுக்கவே முன்வருவார்
சண்டைமுட்டுங் குண்டுணிகள் தான்.

3. நொந்துசொன்ன புண்மொழியை நோகாமல்
வெந்து நெஞ்சம் வேகவைப்பரே [கொண்டுவந்து

4. ஒன்றைப் பெருக்கியே ஒன்பதாய்க் காட்டிமனத்
துன்பத்தைத் தோண்டியெடுப் பார்.

5. அங்குமிங்கும் பல்லிளித்து அன்பைக் குலைத்திடுவோர்
தங்குகொள்ளி போன்றவர்கள் தான்.

6. 'கடைகெட்ட நாயெனவே காமாட்டி சொன்னான்
தடையென்ன?' என்றுமுட்டு வார்.

7. குண்டுணிகள் இன்றேல் குடும்பத்தில் கேடில்லை
சண்டைபூசல் இல்லையென்றே சாற்று.

8. குடுமி முடிந்து குடிகுலையச் செய்து
நடுவில் வரிதண்டு வார்.

9. வாசற் படியேறார்; வம்புகளை நாங்களே
பேசி(ச்)சரி செய்வோ மெனின்.

10. சண்டாளக் குண்டுணிகள் சந்தியெலாம் 'சீ'ப்பட்டு
துன்பவாதை கொண்டுமடி வார்.

T. S. குழந்தைவேல் முதலியார்.

---

நாம் நண்பர்களென்று எண்ணி யிருந்தோ ரெல்லாம் நமக்கு உதவாமல் பராமுகமா யிருந்துவிட, எப்போதோ ஒரு சமயம் அறிமுகமான ஒருவர் நமக்கு அந்த வேளையில் மனஸ்பூர்வமாக வேண்டிய உதவிகள் செய்ய முன் வந்து விடுகிறார். இது கடவுள் அனுப்பிய துணை போலும்.

இருக்கிற கபட புத்திக்குத் தகுந்தபடியே பகவானும் அவரவர்களை வைத்திருக்கிறார். கபடன் ஓங்குகிறான். ஆனால், பிறகு விருத்தி கெடுகிறது.

# மூளைக்கு விருந்து.

1. அருணாசலமும் ஆறுமுகமும் ஆப்த நண்பர்கள். இருவரும் ஓர் அடவியில் சந்தித்தார்கள். அருணாசலம் ஆறுமுகத்தைப் பார்த்து நான் உன் சேரிக்கு வர விரும்புகிறேன் என்றான். நீ வருவது எனக்குச் சம்மதமே; ஆயினும் என்னோடு அழைத்துச் செல்லமாட்டேன். என் இல்லத்தில் மூன்று திசைகளிலுமுள்ள அதிசய அடையாளங்களை உரைக்கிறேன். அதைக் கண்டறிந்து உபயோகமில்லாத மூப்பாலுடன் வா. எவ்வாறெனில் திசை 1. ஊசிக்கும் நூலுக்குமூடே; திசை 2. பூவுக்கும் நாருக்குமூடே; திசை 3. பாலுக்கும் பானைக்குமூடே; என்றான். எப்படிக் கண்டறிந்து செல்வது?

2. மூன்றெழுத்திலோர் மரத்தின் பெயர் :—முதலெழுத்தில்லாவிடில் ஓர் எண்ணின் பெயராகும்; இடையெழுத்தில்லாவிடில் பூமியின் பெயராகும்; கடையெழுத்தில்லாவிடில் அறையின் பெயராகும். இப்பெயரெது?

3. காசினியில் கதலி பறக்குமா?

4. வினை வெளி வருவதேன்? வைக்கோல் போர் போடுவதேன்?

5. ஒரு மோதிரத்தின் விலை இருபது ரூபாய்; ஒரு கதர் வேஷ்டியின் விலை ஒரு ரூபாய்; ஒரு நோட் புத்தகத்தின் விலை நான்கணா; ஒருவன் நூறு ரூபாய்க்கு நூறு உருப்படிகள் வாங்குகிறான், வகைக்கெத்தனை வாங்குகிறான்?

6. சர்பங்களுக்கு சத்துருக்கள் மூவர் யார்?

7. குட்டிபோடும் ஜெந்து குவலயத்தில் பறக்குமா?

அரவக்குறிச்சி—எஸ். கே. பிச்சை முத்துராஜா.

ஃ

☞ சென்ற ஆவணி ஸஞ்சிகையில் 383-ம் பக்கத்திலுள்ள வினாக்களுக்கு விடை:—

1. உப்பு, 2. ஆலம்விழுது, 3. இலவமரம், 4. நூலினால், 5. பெருங்காயத்தால், 6. அன்னத்தால், 7. மாம்பழம்—40, பலாப்பழம்—20, புஸ்தகம் 40. 8. 1—யயாதி, 2—மனைவி, 3—யமுனை, 4—தேகம், 5—தென்னை, யானைமுகன். 9. அவாசி (தெற்கு), 10. அமிர்த குண போதினி.

---

பிசாசை ஓட்டும்போது இந்தக் கூட்டை நான் விடமாட்டேன் என்று அது சொல்லுமாம். பிசாசு பிடித்தவர் இளைத்துத் தோலும் எலும்புமாகி விடினும், கடைசிச் சொட்டுரத்த மிருக்கும் வரையிலும் கூட்டை விட்டுவிடப் பிசாசு இஷ்டப்படுகிறதில்லை. அவ்விதமே, ஒரு குடும்பத்தையொட்டிச்சேர்ந்து வேலை ஏதுமின்றி உட்கார்ந்து தின்று கழித்து அதைப் பாழாக்குவோர் அக்குடும்பம் அடியுடன் கெடுகிறவரையில் அதை விட்டு விலகுவதேயில்லை.

---

வீட்டிற்கு வந்த விருந்தாளிகள் வீட்டில் எவருக்காவது வியாதி நேர்ந்தால் வெளிக்கு மட்டும் அனுதாபமாய்ப் பேசிவிட்டு மெதுவாக ஊருக்குப் புறப்பட்டு விடுகிறார்கள். போனவர்கள் கடிதம் எழுதுவதுகூட யில்லை!

# கமலத்தின் காதல் மணம்.



'என்னடி கமலம்! இதென்ன கோலம். உன் படிப்பெங்கே? பாட்டெங்கே? குதூகல மெங்கே? ஏதோ பறிகொடுத்தவள்போல அலை கின்றனையே. முன்னெல்லாம் நாங்கள் யாராவது சிறிது சோர்ந்திருந்தால் எங்களை எவ்வளவு சீக்கிரத்தில் குதூகலப்படுத்திவிடுவாய். இப்பொழுது உன் முகத்தில் மகிழ்ச்சிக் குறியைக் காண்பது எவ்வளவு அரிதாய் விட்டது? உடம்பும் உள்ளமும் ஒருங்கே குன்றிச் சோர்ந்து திரிவதின் காரணம் என்ன? நானும் எத்தனையோ தடவை உன்னைத் தனியே சந்தித்துக் கேட்க வேண்டுமென்று நினைத்தேன்; சமயம் வாய்க்கவில்லை' என்றேன். ஃ

கமலம் தன் கண்களில் தோன்றிய நீர்த்துளிகளை மறைத்துக் கொண்டு கூறுவாள். 'ஆம் 'கனகம்' நான் பறிகொடுத்தவளே. உன்னிடம் என் குறையைச் சொல்லாமல் வேறு யாரிடம் சொல்லப்போகிறேன். நமது கஷ்டத்தை அறிந்தார் யார்? வெளியிற் சொல்லவோ வெட்கம். சொன்னாலும் குற்றம் பகிரங்கமாகி விடுமென அஞ்சி மனதிற்குள் அடக்கினதால் அதுவே பெருஞ்சுமையாய் நின்று என் உடலையும் உள்ளத்தையும் கரைத்து வருகிறது. உண்மை இது தான் கனகம். சில காலமாக கருத்தொருமித்த காதல் வாழ்க்கை யொன்றை எதிர்பார்த்து நின்றேன். அடிக்கடி என் அகக்கண்ணின் முன்பு அக்காக்ஷியைச் சித்தரித்து அக மகிழ்ந்து வந்தேன். ஆனால், கனகம், தற்போது என் எண்ணமெல்லாம் மண்ணாக, என்னருமைக் காந்தன் என் மனங் கவர்ந்த மனோகரன், நேற்றும் என் கனவிற் தோன்றி காக்ஷியளித்த கருணாகரன், என்னை மணக்கவியலாதென்று என் தந்தை சில தினங்களுக்கு முன் கூறினார். காரணம் தனது மைத்துனனாகிய எனது காந்தனின் தந்தையார் மீது தாம் கொண்ட உட்பகையாலாம். அன்றியும் 'படித்தும் தொழிலின்றியலையும் சோம்பி' என்று என் காதலனைக் குறிப்பிட்டார். வேறு யாரோ ஒருவரை எனக்காகத் தேர்ந்தெடுத்திருக்கிறாராம். அவருக்குப் போலீஸ் இன்ஸ்பெக்டர் உத்தியோகமாம். காதலற்ற மணாளனோடு வாழும் துயரவாழ்க்கையொருபுற மிருக்கட்டும். கனகம், அந்தப் பழைய அன்பை மறப்பது எங்ஙனம்? புதியதாய் ஒரு புத்தகம் வாங்கினால் அதை தான் முதலில் படிக்க மாட்டார். என்னிடம் கொணர்ந்து 'கமலம் இதைப் படி கேட்கலாம்' என்று சொல்லி, நான் படித்தால் எவ்வளவு ஆர்வத்தோடும் கேட்டுக் களிப்புறுவார் தெரியுமா? அவர் முன்னிலையில் படிப்பதென்றால் எனக்கும் எவ்வளவோ உற்சாகமாயிருக்கும். அத்தான் என்று அவரை ஆர்வத்தோடும் அழைத்த வாய் இனி வேறொரு ஆடவரோடு கூசாது பேசிக் களிப்புறுவ தெங்ஙனம்? நீயே சொல். கனகம், துன்பம் நிறைந்த இப்பாழும் உலகில் காதல் வாழ்க்கையாம்! அந்த ஒன்று மட்டும் இல்லாவிடில்**'

ஃ

மேலே எதும் கூறவியலாது சிறு குழந்தைபோல விம்மினாள். அவளது அழகிய வதனத்தில் வழிந்தோடிய கண்ணீர்ப் பெருக்கையும் நெற்

தியில் முத்துப்போல் நின்ற நீர்த் துளிகளையும் என் முந்தாணையால் துடைத்துவிட்டு அவளுக்குச் சில தேறுதல் மொழிகளைக் கூறித் தேற்றி யனுப்பிவிட்டு வீடு வந்தேன். அன்றிரவு எனக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. கமலத்தின் காதலை நிறைவேற்றிவைப்ப தெங்ஙனம் என்ற யோசனையில் என்மூளை பலவிதமாய்க் குழம்பி நின்றது. ஃ

கமலத்தின் விஷயத்தில் ஏன் எனக்கிவ்வளவு அக்கரை? ஆம், அவள் என்னருமைத் தோழி. கல்வியறிவும் உயர்ந்த நோக்கமும் வாய்ந்த கட்டழகி. அவளுடைய வதனத்தில் அன்று நிறைந்திருந்த துயரக்காக்ஷி என் மனசை வாட்டிவிட்டதல்லவா? அச்சமயம் அவளுடைய வதனத்தில் வழிந்தோடிய கண்ணீர் என் உள்ளத்தை உருக்கிக் கரைத்தே ஓடிய தென்னலாம். ஃ

நிற்க, அன்றிரவு என் யோசனை வீண்போகவில்லை. கடைசியாக திசை தப்பி யலைந்த மாலுமி ஓர் கரையைக் கண்டாற்போல மன நிம்மதிகொண்டு கண்ணயர்ந்தேன்.

* * *

இடையே வருஷம் ஒன்று கடந்தது. ஒரு தினம் கமலத்தின் வீட்டுக்குச் சென்றேன். அவளுடைய தாயார் என்னை நோக்கி 'கனகம், உன் சிநேகிதைக்கு அடுத்தவாரம் திருமணம் நிச்சயித்திருக்கிறது' என்றாள். 'யாருக்கு? போலீஸ் இன்ஸ்பெக்டருக்கா?' என்று திகைப்புடன் கேட்டேன். 'இல்லை, இல்லை. அது தெரியாதா உனக்கு; ஒரு நாளிரவு, அல்ல அல்ல, பல இரவுகளில் கமலம், கனவில் அந்தப் போலீஸ் இன்ஸ்பெக்டரைக் கண்டு பயந்து 'ஐயோ போலீஸ், துப்பாக்கி, செத்தேன்', என்று கதறினாள். நாங்கள் விழித்து அவளை எழுப்பித் தேற்றினோம். அவன் பயத்தைப்போக்க வெகு கஷ்டப்பட்டோம். அதிலிருந்து அவள் தகப்பனாரும் போலீஸ் இன்ஸ்பெக்டரின் பேச்சை நிறுத்திவிட்டார். இதற்கிடையே என் அண்ணாவின் பிள்ளை ரெவினியூ இன்ஸ்பெக்டராய் வேலையிலமர்ந்து ஓர் பெருஞ் சோதனையில் பதினாயிரம் ரூபாய் லஞ்சத்தை மறுத்து தன் யோக்கியதையை நிலைநாட்டினதின் காரணமாக தாசில்தார் வேலை கிடைத்திருப்பதாயும், தான் மணம் செய்துகொள்வதாயின் கமலத்தைத் தவிர வேறு பெண் தேவையில்லை என்று சொல்வதாயும் தகவல் கிடைத்தது. ஆகையால், இப்பொழுது அவள் தந்தையும் தன் மனசை மாற்றிக் கமலத்தின் விருப்பப்படியே என் அண்ணாவின் பிள்ளைக்கே கொடுக்க ஏற்பாடாகி யிருக்கிறது' என்றாள். ஃ

அச்சமயம் கமலம் உள்ளே யிருந்துவந்து என்னைத் தனியே உள்ளே இழுத்துச்சென்று கூறுவாள். 'கனகம்! உன் யோசனைப்படி அன்று முதல் சில இரவுகளில் நான் கனவில் போலீஸ் இன்ஸ்பெக்டரைக் கண்டு பயந்ததுபோலக் கதறியிராவிட்டால், வெகு நாளைக்கு முன்பே என்னை அப்போலீஸ் இன்ஸ்பெக்டருக்குப் பலி கொடுத்திருப்பார்கள்' என்றுகூறி ஆனந்தக் கண்ணீர் சொரிந்தாள்.

ஃ

அக்கண்ணீருக்குத் துணையாய் என் கண்களினின்றும் கிளம்பிய நீர் அருவியும் கலந்து ஓடிநின்ற காக்ஷியைக் கண்ணுற்றவர் அத்திருமணத்தில் தம்பதிகளைக் காட்டிலும் அதிக உற்சாகம் கொண்டிட்டவள் நானே யென்பதை நன்கறிவர் என்று கூறிக் கனகம் தன் சிநேகிதையான கமலத்தின் காதல் மணக்கதையை முடித்தாள். எம். கே. பிள்ளை.




# அன்னே! நீ மாறியது என்னே?

(“ பச்சைமலை பவளமலை எங்களது நாடு ”—என்ற மெட்டு.)

‘செல்வ மகப்பேற்றை அருள் செய்க’ என இறைவன்
திருஅருளை வேண்டி பல தினம் விரதமிருந்தே
நல்வயிற்றில் பத்து திங்கள் நயந்து சுமந்திருந்தே
நலம் பலவும் பெற என்னை நானிலத்தில் அளித்தாய்!
அல்லல் பல என்பொருட்டா யடைந்தும் சலிப்பில்லாய்!
அன்னாய்! நின் கைப்பெருமை அறைவதின்(று) எவ்விதமே?
கல்விதந்த தந்தையினும் கருணைமிகும் நீயே
கடவுள் நிகர் அன்பினை! நின் கைகட்குப் பல்லாண்டே! (க)

இரவுதோறும் நின்னருகில் என்னையிட்டு, எந்நேரம்
எனினும் இன்பால் ஊட்டிஅன்போ(டு)இறுக அணைந்திருந்தாய்
விர(வு)என் பிணி விலகிட பல் வித மருந்தும் அருந்தி
விசனமெலாம் என்பொருட்டாய் விருப்போடும் ஏற்றிருந்தாய்!
கர(வு) அறியாய்! பலரிடமும் காட்டி மகிழ்ந்திருந்தாய்!
கனக நகை அணிந்தெனக்குக் களிப்பூட்டி வளர்த்தாய்!
உரை மழலைமொழி கேட்டு உவகைக் கடல் படிந்தாய்!
ஓடி வரின், என்னை எடுத்(து) உச்சிமுகந்(து) உகந்தாய்! (உ)

இருகால்களிடை கிடத்தி இனிய கதை பலவும்
இயம்பி மகிழ்வூட்டி துயில் எய்திடச் செய்தனையே!
தெருவோடி விளையாடி தெருப்புழுதி படிந்து
சிரித்து வரும் எனை இழுத்துச் சீக்கிரம் நீராட்டி,
‘வருவாய்! கண்மணியே! உன் வண்ணஉடை உடுத்தி
மகிழ்வு பெற அலங்கரிக்க வருக”—என வேண்டி
ஒருபோதுஞ் சலிப்பின்றி உவகையோடும் வளர்த்தாய்!
உலகில் எனக்(கு) உனையன்றி உயர்தெய்வம் மற்றுண்டோ? (ங)

அடித்தாலும் அன்னை உனை யன்றி கதி யின்றி
அழுது நெருங்கிட, என்னை அணைத்தெடுத்துக் களித்தாய்!
நடிப்பாலும் உன்னன்பை நான்இனி வே(று) எவர்பால்
நலமுறக் கண்டிடக் கூடும்? நன்முத்தம் அளித்தே

'படித்தால் தின் பண்டங்களும் பட்டுடையும் தருவேன்;
பள்ளிக்குச் செல்க'-என பரிந்துதினம் விடுத்தாய்!
குடித்தனத்தில் பெரியவனுய்க் கூறநின்றேன் இன்று;
கொண்டவளால் உன்னன்பு குலைந்ததையோ இன்று! (ச)

மருகியிடம் கொளும் சினத்தால் மகன் எனை நீ வெறுத்தாய்!
மனைவி மயல் தலைக்கேறி மயங்கியதாய்ப் பழித்தாய்!
வருடம் பல கொண்டிருந்த மகவன்பை மறந்தாய்!
மறந்திலன் யான் உன்னன்பின் மாண்பதனை என்றும்!
பெருஞ் சினத்தால் என் மனத்தைப் பெரிதும் புண்படுத்திப்
பெறுவது நீ என்ன பயன்? பெற்றெடுத்து இந்நிலத்தில்
உருப்படுத்தி யிருக்கும் உனை உள்ளத்து இறையாக
உன்னியுளேன்; வன்மொழிகள் உரைத்தல் இனிவேண்டாம்! ()

மழலைமொழி குழவிகள் நம் மனையில் விளையாட
மனைவியென ஒருத்தியைமுன் மணமெனக்குப் புரிந்தாய்!
பழய மகவன்பை இன்று பற்றறவே விடுத்தாய்!
பழிமொழிகள் சொற்கணைகள் பல என்மேல் தொடுத்தாய்!
உழலும் என்றன் உண்மைநிலை உணர்ந்திலை நீ சிறிதும்!
உனது நன்றி மறக்க என்றும் ஒருப்படமாட்டேன் யான்!
அழகு கொலோ எனை சபித்தல்? அடைக்கலம் வேறு எவரே?
அன்னே! நின்றன் பழய அன்பு இன்று என்? அன்னே!! (சூ)

ஆரியூர்—வ. பத்மநாப பிள்ளை.

### கவர், கார்டு எழுதுதல்.

கார்டில் அவருக்குப் பதில் எழுதிவிடுவோமென்று நினைத்தால் உடனே அது எழுதப்பட்டுத் தபாலுக்குப் போய்விடுகிறது. அவ்விதமின்றி ஒரு விஸ்தாரமான கடிதம் கவரில் எழுதுவதெனக் கொண்டால், அதற்கு நேரம்வாய்க்காமலே இன்று நாளையென நெடுநாள் கடந்துவிடுகின்றது. இவ்வாறே, அதிக சொத்து தருவதாகச் சொல்லியவர்களும்—எல்லா சொத்துக்களும் உன்னொருவனுக்கேதான் என்றவர்களும் கடைசியில் ஒரு சொத்தும் கொடுக்காமலே போய்விடுகிறுர்கள். ஏதோ உனக்கு என்னிடமுள்ள சொம்பு, கிண்ணி, பாத்திரங்கள் கொஞ்சம் கொடுக்கிறேனென்று சொன்னவர்கள் அவ்விதமே கொடுத்திருக்கிறுர்கள். பலநாள் பொறுத்து விரிவுக்கடிதம் எழுதுவதிலும், முதலில் சிறு பதிலாக ஒரு கார்டு அனுப்பிவிடுவது மேல்.

# விநோதக் கடிதங்கள்.

## I. காசுமாலைப் பரிசு.

### 1

அன்பு மிக்க என்னருமைச் சென்னை மாமா,

தாங்கள் சென்ற வருஷம் ஏகாதசிக்கு இங்கு வந்து என்னிடம் இருந்தபோது கல்லிழைத்த காசுமாலை வாங்கி யனுப்புவதாகச் சொல்லிச் சென்றீர்கள். மாதம் ஐந்து ஆகியும் தாங்கள் அனுப்பவில்லை, உத்தியோகத் தொல்லையில் மறந்தீர்கள் போலும். தங்களின் பிராண நேசிக்கு எப்பொழுது அந்த ஸன்மானம் கிடைக்குமோவென்று எதிர்பார்க்கிறேன். மோஹனம்பாள்.

### 2

என் மனத்தைக் கவர்ந்த ஸ்ரீரங்கத்து மோகனா!

உன் கடிதம் வந்தது. உன்னை நான் மறப்பேனா! உன் சரஸ குணத்தை மறப்பதா? என்னைப் பிரியாது சுற்றிக்கொண்டிருந்த அன்பை மறப்பதா? உன் இனிய முத்தங்களை மறப்பதா? காந்தக் கவர்ச்சியுள்ள உன் வசீகர வதனத்தை மறப்பதா? "மன்மதா! என்ன நீதி மங்கை நானும் நொந்திட" என்று பாடிய நினது கானரஸத்தை மறப்பதா?—உன் இன்பத்தை மறப்பதா? மறக்கவும் முடியுமா? இத்துடன் காசுமாலை அனுப்பியிருக்கிறேன். பெற்றதற்குப் பதில் உடனே கொடு. மன்மத மூத்து.

### 3

கானரஸ கோகிலமே! மோகனா!

உன் பிரியப்படியே காசுமாலை அனுப்பி மூன்று வாரங்களாயின. வந்து சேர்ந்ததற்கு நீ பதிலே எழுதவில்லை. ஏனோ அப்படி? உன் அன்பு நிருபத்திற்குக் காத்திருக்கும் நின் இன்பதாஸன், மன்மத மூத்து.

### 4

அன்புள்ள வஞ்சகப் பட்டணமே!

நீர் இவ்வளவு மோசப் பொட்டணமென்று நினைக்கவேயில்லை. நீங்களும் நானுமாக பி. ஆர். அண்டு ஸன்ஸில் பார்வையிட்ட கல்லிழைத்த காசு மாலையை யல்லவோ நான் கேட்டிருந்தேன். அதற்குப் பதிலாக எவ்வ

---

வைதீகத்தால் ஜீவிப்பவர் எண்ணிலர். ஸ்வாமி கோயில் பேரைச் சொல்லிக்கொண்டும், புண்ணிய பாவங்களைக் கூறிப் பயமுறுத்திக்கொண்டும், மற்றவர் தமது காலில் வீழ்ந்து வணங்க, அவ்வணங்குவோராலேயே தமது குடும்ப ஜீவியத்தை நடத்திக்கொண்டு, அவ்வண்ணம் வணங்குவோரையே பிறகு கேவலஜாதியாகத் தாழ்த்திப் பேசியும் காலங்கழிப்போர் கணக்கில்லாதவராவர்.

ள்வோ போட்டு உபயோகித்துத் தேய்ந்து பழயதானதை அனுப்பியிருக்கிறீர்கள். அந்த வருத்தத்தால் நான் கடிதம் எழுதவில்லை. இனி மேலாவது என்னை நீங்கள் திருப்தி செய்வீர்களா? மோஹனம்பாள்.

5

என் ஆசைப் பூங்காவனமே! என் கண்ணே!

இங்கு நடந்த சங்கதி உனக்குத் தெரியாதானதால் நீ கோபிக்கிறாய். நீ விரும்பிய கல்விழைத்த காசுமாலையையே பி. ஆர். அண்டு ஸன்ஸில் வாங்கி வீட்டில் பெட்டியில் வைத்திருந்தேன். அதை என் மனைவி பார்த்து விட்டாள். ஒரு நண்பர் வாங்கச் சொல்லியது என்றேன். எனக்குத் தெரியாமல் அதைப் போட்டுக்கொண்டு தாய் வீட்டுக்குச் சென்று விட்டாள். அது இருந்த பெட்டியில் தன் காசு மாலையை வைத்துப் போனுள். இனி நான்கு நாட்களில் வந்து விடுவாள். வந்ததும் கண்டித்துத் திட்டிக் கட்டாயம் வாங்கியனுப்புகிறேன். அவள் வந்ததும் தன் காசுமாலை எங்கே என்பாள். ஆதலின் நீ அதை உடனே அனுப்பிவைக்கவும். மன்மத மூத்து.

6

என் அன்புள்ள சென்னை மாமா!

தங்கள் கடிதப்படி காசுமாலையை அனுப்பி இரண்டு வாரங்களாகியும் தங்களிட மிருந்து பதிலே வரவில்லை. "வந்ததை ஏண்டி திருப்பியனுப்பினுய், ஏமாந்த நாயே" என்று என் தாயார் வைகிறாள். தங்களின் அன்பு எனக்குத் தெரியாததா? தங்களையே அடியாள் நம்பியுள்ளேன். தாங்கள் தான் என் பிராணன்—ஸம்பத்து—வாழ்வு. தங்கள் மனைவி வந்திருக்கலாம். புதிய காசு மாலையை உடனே அனுப்பவேண்டுகிறேன். மோஹனம்பாள்.

7

நன்றியற்ற மிருகமே மோஹனு!

உன் தாயார் வெகு யூகசாலி. அவள் உன்னை வைததும் சரியே. கேவலம் விலைமகளான உன் மோகத்தில் மயங்கி என் மனைவியின் காசுமாலையை ஒரு நண்பனின் விவாகத்திற்கென்று சொல்லிப் பெற்று அதை உனக்கு அன்புடனே அனுப்பினேன். அதன் விலை 450- ரூபாய் ஆகிறது. அது வந்து சேர்ந்ததற்குக் கூட நீ பதில் எழுதவில்லை. பிறகு நானே கடிதம் எழுதியதற்கு, என்னை மோசப்பொட்டணமென்று கேவலப்படுத்தி வரைந்தாய். அவ்வளவு பெரிய நகையை நான் வெகுமதியாகத் தந்ததற்கு நன்றி யுணர்ந்து

---

எவ்வளவோ கற்றுக்கொடுத்தும் சிறுவர்கட்குப் படிப்பு சுலபமாக வருவதில்லை. ஆனுல், அதற்கேற்ற பக்குவகாலம் வரும்பொழுது, விளையாடிக்கொண்டிருந்த பெண் தான் புஷ்பவதியானதும் நாண மூணர்ந்து பக்குவப்படும் தன்மைபோல், படிப்பு வராதோரும் அந்தப் பக்குவகாலம் கிட்டிவந்ததும் ஒழுங்குபட்டுத் தீக்ஷண்ய புத்தியுடையோராய்ப் பிரபலப்பட்டுப் போகிறார்கள்.

வது இவ்விதம் தானு? வேசிக்கு விஸ்வாசமேது? இடைத்தவரையில் கொள்ளை மூடத்தனமாய் நான் ஏமாறினேன். என் கண்ணனைய மனைவியின் அதிர்ஷ்டம் அவள் இழந்த நகையை மறுபடியும் பெற்றுக் கொண்டாள், நீ இந்தக் கடிதத்தையே கல்லிழைத்த காசுமாலையாகக் கொள்ளவும். உன் இனிப்புக் கடிதத்தில நான் மயஙகுகிற காலம் மலையேறிவிட்டது. காசுமாலையை மறுபடி பெறவே வெகு தித்திப்பான நடையாக மயக்கி எழுதினுய் போலும்! ஏமாந்தவளே! ஏங்கி நில். மோசப்போட்டணம்.

## II. இரத்தின வியாபாரம்.

### 8

பலராமன் செட்டியாரவர்களுக்கு,

தாங்கள் என்னிடம் பெற்றுச் சென்ற அட்டிகையை விற்று விட்டீர்களா? எவ்வளவுக்கு விலை போயிற்று? விவரத்துக்குக் கடிதங்கூட எழுதவில்லையே? உடனே தொகையை அனுப்பவேண்டுகிறேன். குண்டப்பன்.

### 9

ஸ்ரீமான் குண்டப்பருக்கு,

நகை 170-ரூபாய்க்கு விற்றுய் விட்டது. பணம் பாதிதான் வந்திருக்கிறது. முழுதும் வசூலித்து இம்மாதக் கடைசியில் அனுப்புகிறேன். கவலை வேண்டாம். என் நாணயத்தை நம்புங்கள். பலராமன் செட்டியார்.

### 10

ஸ்ரீமான் பலராமன் செட்டியாருக்கு,

இரண்டு மாதமாகத் தங்களிட மிருந்து பணம் எதிர்பார்த்தும், அதற்காக எட்டு கடிதங்கள் இதுவரை எழுதியும் வரவேயில்லை. உடனே அனுப்புகிறீர்களா? அல்லது நான் புறப்பட்டு வருவதா? குண்டப்பன்.

### 11

ஸ்ரீமான் பலராமன் செட்டியாருக்கு,

நேரில் தங்களிடம் ஐந்து பவுன்களும் கெம்புகளும் கொடுத்து ஜடைப்பில்லை செய்து அனுப்பும்படி சொல்லிவந்தேன். நாலு மாதங்களாகியும் இன்னும் கடிதம் வரவில்லை, நகையும் அனுப்ப வில்லை. உடனே கண்டிப்பாய் நகையை அனுப்பி மறு வேலை பார்க்கவும். தோந்திப்பிள்ளை.

☞ இக்கடிதம் அந்த விலாஸதார் இல்லையென்று திரும்பிவருகிறது.

---

பிறர் சொத்துக்கு ஆசைப்படாவிடின் ஏக்கமில்லை. மனதில் வஞ்சனை கபட மேற்படாவிடின் பிறர்முன் தன் தலையைச் சாய்க்க வேண்டியதில்லை.

## 12

வீரநாதம் பிள்ளை அவர்கட்கு,

பலராமன் செட்டியார் இப்பொழுது சென்னையில் இருக்கிறாரா என்ற விவரம் உடனே தெரிவிக்கவும். குண்டப்பருக்கும், எனக்கும் அவரிட மிருந்து பணமும் நகையும் வர வேண்டியிருக்கிறது. கடிதங்கட்குப் பதிலும் இல்லை, நாங்கள் மிகவும் கவலைப்பட்டு நிற்கிறோம். தோந்திப்பிள்ளை.

## 13

ஸ்ரீமான் தோந்திப்பிள்ளைக்கு,

பலராமன் செட்டியார் சென்னையை விட்டுத் தமது சொந்த ஊருக்குப் போய் இரண்டுமாதமாகிறது. நான் விசாரித்தவரை அவரது சொந்த ஊர் எது வென்று தெரியவில்லை. வயிற்றுப் பிழைப்புக்காகச் சென்னைக்கு வரும் நாடோடிகளில் அவரும் ஒருவராகலாம். முதலில் யோக்கியனாக நடிப்பது பிறகு ஏமாறுவதற்கேயாம். உங்களின் தொகையையும், நகையையும் நீங்கள் இழந்தது போலத்தான். மிகவும் துக்கிக்கிறேன். வீரநாதம் பிள்ளை.

---

# III கோலாகல ரஞ்சித பூஷண நாடக சபா.

## 14

கருணை மிக்க சந்திரகாசருக்கு,

தங்கள் கம்பேனி இவ்வூருக்கு விஜயம் செய்தது எங்கள் பாக்கியமே. தங்களின் நல்வரவை எதிர்பார்க்கிறேன். கம்பேனி வீட்டிற்கு என்னை வரு மாறு வரைந்திடினும் வருகிறேன். தங்கள் மீது காதல் நோய் கொண்டுள் ளேன். தங்கள் கம்பேனியிலிருக்கும் ஸ்திரீபார்ட் சின்னபாப்பா என்னைப் பற்றித் தெரிவிப்பாள். திருமுகம் காண அவா. அன்புள்ள, ஜீவாம்பாள்.

## 15

பிரியமுள்ள ஜீவாம்பாளுக்கு,

உன் கடிதம் வந்தது. உன் இனிய குணத்தைச் சின்ன பாப்பாவிடம் தெரிந்து கொண்டேன். இத்துடன் நான்கு டிக்கட்டுகள் அனுப்பி யிருக்கிறது. விரைவில் சந்திக்கிறேன். இந்த சனிக்கிழமை திரௌபதை வஸ்திராபஹா ரணம் வைத்திருக்கிறது. உன்னிடம் நல்ல சேலைகள் இருந்தால் நமது சின்ன பாப்பாவிடம் கொடுத்தனுப்பவும். G. X. சந்திரகாசம், புரொப்ரைட்டர்.

## 16

ராஜபார்ட் ரங்கடு ஐயரவர்கட்கு,

தாங்கள் என் பர்த்தாவைக் காண வந்தபொழுது தங்களின் அழகில் மயக்க முற்றேன். சகுந்தலா நாடகத்திற்கும் வந்து தங்களின் ஆக்ட்டைக்

---

கண்டு பிரமித்தேன். என்மேல் 1300-ரூபாய்க்கு நகைகளுண்டு. யாவும் தங்களுக்குச் சொந்தமே. அடுத்த வாரம் கம்பேனி வெளியூருக்குப் போவதாகக் கேள்வி. தங்களுடன் நானும் வந்து விடுகிறேன். பங்கஜவல்லி.

## 17

அன்புள்ள ஆரணங்கே ! என் சொந்தக் கிளியே !!

உன் கடிதம் என் உயிரைக் கொள்ளை கொண்டது. நான் நாளை இரவு மெயிலில் திருநெல்வேலிக்குச் செல்கிறேன். நீயாகவே ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்தால் இருவரும் சேர்ந்து போகலாம். ராஜபார்ட் ரங்கடுஜயர்.

## 18

மப்புராமபிள்ளை அவர்கட்கு,

தங்கள் தந்தியின்படி மணியாச்சி ஸ்டேஷனில் தங்கள் மனைவி பங்கஜவல்லியையும், ராஜபார்ட் ரங்கடு ஐயரையும் கண்டு பிடித்து விட்டேன். நகைக்கும் மனுஷிக்கும் சேதமில்லை. தற்போது போலீஸார் வசம் இருக்கிறார்கள். நீங்கள் உடனே புறப்பட்டு வரவும். ஜெகநாதம் செட்டியார்.

## 19

சில்லரைபார்ட் சீநிவாசராவ் அவர்கட்கு,

தாங்கள் என்னை விட்டு விட்டு அந்தக் கருப்புக்குட்டி கனகரத்தினத்தோடும் அதிக உறவாயிருப்பதாகத் தெரிகிறது. இது நியாயமா? என்னை எப்பொழுதும் வைத்துக் கொண்டு மாதாமாதம் ஏதாவது கொடுப்பதாக உத்தேசமா? அல்லது இடையில் விட்டுவிடுவதாக யோசனையா? தெரியவில்லை. நாளை தங்களின் வருகையை எதிர்பார்ப்பேன். சந்திரவதனுள்.

## 20

காணக்கிடைக்காத மாணிக்கமே, சந்திரவதனு !

கனகரத்தினம் ஏதோ இடையில் வந்தவள். இடையிலேயே நீங்கிவிடுவாள். உன் சொந்தம்போல இது ஆகுமா? அவளுடைய தங்க ஒட்டியாணத்தை என் அவசர செலவுக்காகப் பாங்கியில் 92-ரூபாய்க்கு அடகு வைத்திருக்கிறேன். இந்த சமயம் நான் அவளை விட்டுப் பிரிந்தால் சந்தேகிப்பாள். நீ தயவு செய்து ரூபாய் நூறு கொடுத்தால் அதைத் திருப்பிக் கொடுத்து விட்டு உன்னிடம் வந்து விடுகிறன். அடுத்த மாதச் சம்பளத்தில் உன் தொகை உனக்குக் கிடைத்து விடும். உடனே உன் பதில் விரும்பும், சீநிவாசராவ்.

---

ஆவேசமானது மனிதர்களுக்குள் கோபத்தையும் பகையையும் உண்டாக்கி ஒருவரோடொருவர் தயாதாக்ஷிண்யமின்றிச் சண்டை செய்து கொள்ளும்படியாகவும் செய்து, பிறர் நல்லெண்ணத்துடன் ஆக்ஷேபித்தவைகளுக்கும் எதிர்த்து மறுத்துப் பேசவைத்துத் தலை கால் தெரியாதபடி குதிக்கப் பண்ணுகிறது.

21

சில்லரை பார்ட் சீநிவாசராவ் அவர்கட்கு,

தாங்கள் இப்படி மோசம் செய்வீர்களென்று எண்ணவில்லை. கனக ரத்தினத்தின் ஒட்டியாணத்தைப் பாங்கியிலிருந்து திருப்பி விற்று விட்டீர்களாம். அவளுக்குத் தராமலே ஏமாற்றி அவள் தங்கையுடன் ஓடிவிட்டீர்களாம். நான் தந்த 96-ரூபாயையும் எனக்குத் திருப்பித் தரவில்லை. நீங்கள் மதுரையில் இருப்பதாக அறிந்து இது எழுதினேன். பதில் வராவிடில் நான் உடனே வருவேன். ஆனல், சந்தோஷத்தோடல்ல. சந்திரவதனுள்.

☞ஹா! நாடக புருஷர்களிற் சிலரது கதைகள் எத்தனை அழகாயிருக்கின்றன! அவர்களுக்குத் தான் இப்பொழுது தக்க வருமானம்! அவர்களின் பேட்டி இராஜபேட்டிக்கு சமம்! தினம் நாலு கவளி வெற்றிலை! தங்க மெடல் பரிசளிப்புகள்! வெளியே தடபுடல்! உள்ளே ஒட்டை! ஆபாஸம்!!

## பாதியில் தடுப்பது பாவம்.

எந்தவிஷயத்திலும் பாதியில் இடைமறிப்பது பாபம். ஸதிபதிகள் மிக்க அன்பாக ஸம்பாஷித்துக்கொண்டும், ஸரசித்துக்கொண்டுமிருக்கும் அறையின்பக்கம் செல்லுதலும், உள் நுழைதலும் பாவம். இதில் அன்னோரின் மனோரம்யம் பாதியளவில் நின்று பூர்த்திக்கிடமின்றி தத்தளித்துவிடுகின்றது. ஒருவனைப் பாதி போஜனத்தில் இலையைவிட்டு எழுப்புதல் பெரிய பாவம். ஒரு காரியம் பாதிவரையில் ஆனபிறகு நடுப்பாதியில் கெடுக்கப்பார்ப்பது பாபம். தாகத்திற்கு ஜலம் பருகிக்கொண்டிருக்கையில் மறுபாதி முடிவதற்குள் வாங்கிக்கொண்டு போய்விடுதலும் ஒரு பாவச் செய்கையே. ஒரு வேலை செய்துகொண்டிருக்கையில் பாதியில் வந்து குறை சொல்லுகிறார்கள். ஒரு விஷயம் எழுதிக் கொண்டிருக்கையில் நடுவே வந்து சிலர் உட்கார்ந்து பேசுதலும், பாதிபடிக்கையில் பிடுங்குதலும் எவ்வளவோசங்கடம் தரக்கூடியவைகள்தான். ஒரு நல்ல காரியத்தைப் பாதியில் கெடுப்போனுக்கு நரகத்திலுங்கூட இடம் கிடைக்காது.

தாசியை நிந்திக்காதவர்கள் இல்லை. அவள் மீது கண் போடாதவர்களுமில்லை. அவளே வலிய வரின் விரும்பாதார் வெகு சிலரே. அவ்விதமே, மதுவை நிந்திப்போரே ரகசியத்தில் அதை நாடுவர். காபிஹோட்டலைப் பழிப்பவரே அதிகமாய் அங்கு உண்பர். சிற்றின்பத்தைத் தூஷிக்கும் வேதாந்தியும் சமயம் நேர்ந்துகொண்டால் அதில் ருசி காண மனது செலுத்தாமலில்லை.

# விவாகத்திற்குப் பின்.



தனக்குப்பெண்பார்த்து நிச்சயமாயிற்றென்று தெரிந்த அந்த நிமிஷமே சிலர் மாறி விடுகிறார்கள். உயிருக்குயிரானவர்களை மறந்து விட ஆரம்பிக்கிறார்கள். தன் விவாகத்திற்கென்று வந்து வண்டியிலிருந்து இறங்குவோனைப் பார்த்தும் பாராதது போல் இருந்து விடுகிறார்கள். வண்டியிலிருந்தவன் தன்னை அவன் கண்டும் காணாததுபோல் இருப்பதை நோக்கி வியப்புறுகின்றான். இதற்கு முன்பெல்லாம் தான் ஊரிலிருந்து வந்ததும் தன் வண்டியை ஆவலோடும் சுற்றிக் கொண்டிருந்தவன் இப்பொழுது மௌனமாய் எதவும் காணாதவன் போல் இருப்பதை நோக்கித் திகைத்துப் பெட்டியுடன் வீட்டிற்குட் செல்ல, அப்போது தான் அவனைக் கண்டதுபோல் புது மாப்பிள்ளை நடிக்கிறான். இந்த ஒரு கோணலிலிருந்தே புது மாப்பிள்ளையின் புது விதமான புத்திகளை வந்தவன் அறிகிறான். பிறகு விவாகமும் நடக்கின்றது. புது மாப்பிள்ளை எதிலும் பட்டுக் கொள்ளாத புதிய பாஷாவாக இருப்பதையும், முன்னைப்போல் தன்னிடம் நெருங்கி அன்பு உணர்த்தாததையும் கவனித்துக் கொள்கிறான். மௌனமாய்ஊர் திரும்புகிறான்.

ஃ

மறுபடியும் சில மாதங்கள் கழித்துப் புதுமாப்பிள்ளையிடம் வருகிறான். அந்த சமயம் வீட்டுப் பெரியோர்கள் இல்லாத காலமாகித் தான் புசிக்க உட்கார நேருகையில், புதிய மாப்பிள்ளை தன் மனைவி அவருக்குப் பரிமாறுவது கௌரவத் தாழ்வென்று வீட்டு வேலைக்காரியைக் கொண்டு அன்னமிடச் செய்கிறான். இதை வந்தவர் கசப்புடன் உணர்ந்து கொண்டு அதற்குத் தகுந்தபடி இருந்து விட்டுப் புறப்பட்டு விடுகிறார். புது மாப்பிள்ளையின் புதிய தேவியும் அவரை ஒரு அன்னியப் பூச்சி யென்றும், ஏதோ சோற்றுக்கு வந்த வீணனென்றும், பிச்சைக்காரனென்றும் எண்ணி விடுகிறாள். பர்த்தாவைப் போலப் பத்தினியும் ஆகிறாள்.

ஃ

சில வருஷங்கள் செல்லுகின்றன புது மாப்பிள்ளை முன்போல் தன்னை விசுவாசித்தவர்களுக்கு எவ்வித கடிதமும் எழுதுவதில்லை. எல்லாம் புதிய உறவின் முறையாரிடமும், புதிய நண்பர்களிடமுமே பழக்கமாகிறது. பழைய மனிதர்களின் ஞாபகமே இருப்பதில்லை. பிறகு ஒரு அவசிய சந்தர்ப்பம் குறுக்கிட்டுக் கொண்டு முன் வந்து சென்ற பந்துவின் ஊருக்குத் தன் மனைவியோடும் செல்கின்றான். அந்தப் பந்துவும் இப்போதேனும் பழைய அன்பு திரும்பியிருக்குமென்று பிரியமாய் வரவேற்கிறார். புசிப்பு முடிந்ததும் தன் மனைவியுடன் ஊர் விநோதங்களைப் பார்க்கச் சென்று விடுகிறார். பிறகு அந்த சினிமாவுக்கும், இந்த நாடகத்திற்கும், அடுத்த ஊரில் வந்துள்ள சர்க்கஸுக்கும் சென்று உல்லாசமாகத் திரும்புகிறார். இதற்கு முன்பு வந்தபோதெல்லாம் அந்த வீட்டின் பந்துவைத் தன்னுடன் அழைத்துச் சென்றதும், அவருடனே கூடி எந்த விநோதத்திற்கும்

போய் வந்ததும் நினைப்பதேயில்லை. அவரைத் தன்னுடன் வருமாறு அழைப்பது மில்லை. அது தான் தனியாக இருந்த காலமானதால் அப்போது பந்துவை யழைத்துச் செல்லும்படியானது. இப்போதோ தனக்குத் துணையாக மனுஷி ஏற்பட்டிருக்கையில் இந்தப் பந்துவை யழைப்பதெல்லாம் அனுவசிய மென்றும், அது தாங்கள் இருவரும் உல்லாஸமாகப் போய் வருவதற்குத் தடையென்றும், வண்டி வாடகை முதலியன அந்தப் பந்துவுக்குக் கொடுக்க வேண்டி வருமென்றும் புது மாப்பிள்ளை எண்ணி விடுகிறான். பிறகு விருந்துகள் முடிந்து சில தினங்கள் ஆனதும் புறப்பட்டுச் செல்கிறான். போய் சேர்ந்ததற்குக் கூட ஒரு கடிதமும் போடுவதில்லை. தன் புதுப் பெருமையிலேயே தான் மூழ்கி விடுகிறான். பந்துவும் இவனுடைய அல்ப குணங்களை வெறுத்து அவனை மறந்துவிட முயல்கிறார். ஃ

விவாகத்திற்குப் பின் இவ்விதம் மாறி விடுவோர் ஒரு புறமிருக்க, தங்களுக்கு விவாகம் ஆகியிருந்தும், ஆனதே தெரியாமல் பழைய அன்புடனும் எந்த நாளிலும் ஒரே சீருடனும் நிற்கும் உத்தமர்களும் வெகு பேர் இருக்கிறார்கள். எவர்களுக்கு விவாகம் ஆகிக் கண் குளிரக் காணவேண்டுமென்று எண்ணினோமோ, அவர்கள் விவாகத்திற்குப் பின் அந்நிய மனிதர்கள் போலாய் விடுவதும், அவர்களுக்கு வந்த மனைவிமார் நம்மை அந்நியராக நினைத்து ஒதுங்குவதும் நினைக்க நினைக்கத் துயரப்பெருக்கே. சில பெண்கள் தங்களுக்கு மருகி வந்ததும் புது உருவங்களாய் மாறிப் போகிறார்கள். பழைய பந்துக்களை நினைப்பதேயில்லை. புதிதாக வந்த சம்பந்திகளிடமே அதிக பழக்கம். அவர்களுக்கே கனத்த விருந்து உபசாரங்கள் செய்வார்கள். பழைய மனிதர்கள் வந்தால் அது ஒரு பளுவாகவும், வீண் செலவாகவுமே தோற்றுகிறது. ஆயினும், வாய்ப் பேச்சுக்குப் பஞ்சமில்லாமல் இனிக்கப் பேசுவோரு முண்டு. வேறு சிலரோ அதுவுந்தான் ஏன் பேச வேண்டுமென்றும், அவ்விதம் பேசினால் எங்கே ஒட்டிக் கொள்வார்களோ வென்றும் எண்ணி வெறுப்புடன் மௌனமாய் விடுவோரு முண்டு. புசித்துப் போங்கள் என்று சொல்லாமலே ஜாடையாக ஒதுங்கி இருந்து விடுவோரும் இருக்கிறார்கள்.

---

## அது வக்கீல் கொடுத்த பலம்.

அந்த மனிதன் சகல சொத்துக்களும் தன்னை விட்டுப் போய்விட்டதென்று சோர்ந்து, நடக்கவே சக்தியற்றுக் கிடந்தவனாயிற்றே. இன்று அவன் விரைவாக உற்சாகத்துடன் நடந்து செல்கிறானே—அவனுக்கு அந்தப் பலம் எப்படியுண்டாயிற்று? அது வக்கீல் அவனுக்குக் கொடுத்த பலம். உன் பக்கமேதான் நியாயமிருக்கிறது; எவ்விதமும் உன் சொத்துகளைத் திரும்பிப்பெறலாம் என்று சட்டத்திலுள்ளவற்றைத் தெரிவித்து வக்கீல் அவனைத் தைரியப்படுத்தியதில் அவன் சோர்வு நீங்கி எழுந்து நிமிர்ந்து நிற்பவனாய்விடுகிறான். ஆதலின், எதுவும் வக்கீலைக் கேட்டுச் செய்.

# வாழ்க்கைக் குறிப்புகள்.

(195-ம் பக்கத் தொடர்ச்சி.)

12. புருஷனும் மனைவியும் வாழ்வதும், குழந்தை குட்டிகளுடன் விளங்குவதும் சரிதான். அது அத்தனை பெரிய காரியமல்ல. உள் தத்துவத்தில் அவர்கள் ஒருவரையொருவர் விரும்பி நின்று ஒற்றுமைப்பட்டிருக்கிறார்களா என்பதே கேள்வி. சில பெண்களுக்குத் தங்கள் கணவன் ஒரு பேச்சைப் பேச எடுக்கும்போதே அவர்களுக்கு அது பிடிப்பதில்லை. இதென்ன தொண தொணவென்று ஓயாமற் பேசுகிறீர்களே என்கிறாள். அவ்வளவோடு இல்லை. அவனுடைய சுகக்ஷேமங்களில்கூட அக்கரைகொள்வதில்லை. நோய் வந்து வீட்டுக்காரன் படுத்துக்கொள்ளும்பொழுது அந்த வேளையில்தான் ஒரு பெரிய சண்டையைத் தொடங்கிக்கொள்வாள். இந்த சண்டை வாதம் முற்றிவிடுவதில் வியாதியஸ்தனுக்குக் குறித்த வேளைகளில் பத்தியக்கஞ்சி தாவும் தவறிப்போகிறது. இதுவும் போகட்டும். வீட்டுக்காரனுடைய புசிப்பு, ஸ்நானம், அவனுக்குச் செய்யவேண்டிய சிறு பணிவிடைகள் இதுகளைக் கூடச் செய்வதில்லை. அந்தப் புருஷனின் முகமே அவளுக்குப் பிரியமாயில்லை. அவனோடு கோயில் குளங்களுக்குப் போகவும் ஸந்தோஷமில்லை. ஏதோ கட்டிக்கொண்டதற்கு மனைவியாகக் கிடப்பதன்றி அதில் ஒரு திருப்திபடுவதாகவும் இல்லை. புருஷனுடைய ஆவலாதிகளே அவளுக்குப் பிடிப்பதில்லை. அவனை அவள் தக்கபடி 'திருப்தி' செய்வதுமில்லை. இவ்வளவுக்கும், அவள் மனப்பொருத்தம் தன் கணவனிடத்தில் பொருந்தி நிற்காமைதான். இதிலிருந்து அவள் வேறொரு மனிதன்மேல் சிந்தை வைக்கவும் நேர்ந்துபோகிறது. ஆடவர்களிலும் சிலர் அதிரூப சம்பன்னைகளான தமது பத்தினிகளை வீட்டில் தனியே கிடத்திவிட்டு, மூக்குபோனவளுடனும், முகம் கோணினவளுடனும், வியாதி பிடித்தவளுடனும், கருப்புக்குட்டிகளுடனும் ஆசை கொண்டு திரிகிறார்கள். ஒருவரையொருவர் விரும்பி நில்லாத வாழ்க்கையும் ஒரு வாழ்க்கையா? அதில் உப்புமில்லை, சப்புமில்லை! ஒன்றுமில்லை!!

ஃ

குலோத்துங்கராஜன் சபையிலே ஒரு வித்வான் ஸ்திரீ புருஷ சங்கமத்தைப்பற்றி ஒரு கவி பாடினர். அதாவது:—

"கரண்ட கண்டத்தொனிக் கஞ்சிய மான் கருங் கங்குலிலே—திரண்ட வெள்ளத்திற் பிணமீது சென்றங்கு சேர்ந்தவளின் — அருண்ட இன்பங் கொடுமீள காம்பற்ற அங்கொலுசால்—குருண்ட கண்டத்தில் உதைத்தனள் காணங் குலோத்துங்கனே" என்பதாம்.

இப்பாடலின் விவரமாவது:— ஒரு ஸ்திரீயானவள் தன் புருஷனுடைய பேச்சும் சுகமும் தனக்குச் சரிப்படாமல் வேறொரு பெருவியாதி பிடித்த அன்னியனிடம் சுகத்தை அநுபவித்துக்கொண்டிருந்தாள். அதற்காக இராத்திரி வேளை அவள் வெளியே புறப்படும்போது அவள் புருஷன் விழித்துக்கொண்டிருந்த

---

எத்தகையோருடைய பொறுமைக்கும் ஒரு எல்லையுண்டு. அதிகமாக அன்னோரை வாதனைப்படுத்தினால் அது தன் தலைக்கே—வாழ்வுக்கே தீங்காகிவிடலாம். தெய்வமும் பொறுக்காது.

தால் அவனும் வெளியிலேவர, கொல்லையில் ஒரு மரத்தடியில் ஒதுங்கினள். அப்போது மரமீதிருந்த ஒரு காக்கை (கர்ர்) என்னவும், அவள் ஓடிவந்து தன் புருஷனைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டாள். புருஷன் அவளைப் பயம் நீக்கி வீட்டுக்குள் புகுந்து படுத்து நெடுந்தூக்கம் தூங்கிவிட்டான். அதே ராத்திரியில் அவள் தன் கள்ளப் புருஷனிடம்போகப் புறப்படுகையில் பெருமழை பெய்ததால், சுடுகாட்டைத்தாண்டிப் போகவேண்டியிருந்ததில், அந்த சுடலைப் பாதையோடும் ஒரு கால்வாயில் வெள்ளம் புரள, அதைத் தாண்டிப்போவதற்காக ஒரு தெப்பம் வேண்டுமென்று அந்தச் சுடலையில் பாதி வெந்துகொண்டிருந்த ஒரு பிணத்தை வெளியிலிழுத்து அதை அந்தக் கால்வாயில் மிதக்கவிட்டு அதன்மேலேறி அக்கரைசேர்ந்து கள்ளப் புருஷனேடு இன்பத்தை அனுபவித்து மனஸ்பூர்வமான திருப்தியடைந்துவிட்டு, அந்தத் தேக உபாதை தீர்ந்து திரும்பும்போது அந்நேரத்தில் அக்கால்வாயில் ஒரு முதலை வந்திருக்கவும், அது அவளுடைய ஒருகாலைப் பிடித்துக்கொண்டது. உடனே அவள் துணிவோடு மறுகாலில் அணிந்திருந்த யானைக்கொலுசு என்கிற தடித்த கொலுசால் முதலையின் வாய்மேல் பலமாக ஒரு உதை கொடுக்க, அதைத் தாளாமல் அது வாயைத் திறந்து விட்டுவிட; இவளும் தன் வீடு சேர்ந்து கணவனின் பக்கத்தில் வந்து படுத்துக்கொண்டாளாம். இப்படி அவள் நடந்துகொண்டது என்னத்தினுலென்றல், தன் கணவன் மீது அவளுக்கு மனப் பொருத்தம் ஒன்றுபட்டிராததால் தன் புருஷன் இன்பம் அவளுக்குச் சரிப்படவில்லையென்பதுதான். தன் கணவன் தக்க வாலிபனய் அழகாயிருந்துங்கூட, அங்கு மனதிற்குத் திருப்திபடாமல் ஒரு அவலக்ஷண அல்ப மனிதன்மீது ஆவலாதிகள் ஏற்பட்டு விடுகிறது. இப்படியெல்லாம் நேரிடுவதற்கு தேக மனே பொருத்தங்கள் குறைவாயிருக்கின்றதென்ற ஒரு காரணத்தோடு நில்லாமல், மனதையும் அறிவையும் ஒழுங்குபடுத்தாமையும் ஒரு காரணமாகும். ஒருவனே ஒருத்தியோ கற்புத்தன்மை யுணர்ந்து நியாயமான மனப்பான்மையை யடைந்தால் உத்தமர்களாகவே நடப்பார்கள். மனதும் எண்ணமுமே யாவற்றைக் காட்டிலும் முக்கியமானவை. அவை நல்வழியின் அஸ்திவாரத்தில் ஊன்றப்பட்டிருப்பின் எந்தப் பொருத்தங்கள் எப்படியானலும், 'இச்சாபூர்த்தி' எவ்வித மிருந்தாலும் சன்மார்க்கம் தவறுர்கள். மிதம் மீறிய காமத்துக்கும், மற்றும் எவ்விதமான துன்பத்திற்கும் துக்கத்திற்கும் கெடுதிக்கும் மூல காரணம் அறியாமையே. இந்த அறியாமையை விலக்கக் கல்வி தேவையெனினும், அதனிலும் முக்கியமாய் நல்லொழுக்கப் பற்றுதலே தேவை. அவ்வொழுக்கத்தின் வழியே தங்களின் மனத்தை யடக்கியாளும் பயிற்சியும் தேவை. இல்வாழ்க்கையென்பது இச்சைப்படி யெல்லாம் நடப்பதென்பதல்ல. எத்தனையோ இச்சைகளை அடக்கியாண்டு சகித்துத் தரும நெறி தவருதிருத்தலேயாம். இல்வாழ்விற்கெனத் தோன்றிய ஆடவர்-மகளிர் இவற்றைச் சிந்தித்துக் கற்பு நோன்பு காப்பாராக.

---

கடை வியாபாரி தன்கீழ் உள்ள ஆளுக்குப் பிறரிடம் பொய் சொல்லும்படிக் கற்றுக்கொடுத்துவிட்டுத் தன்னிடம் மட்டும் பொய் பேசாதிருக்கும்படி திட்டப்படுத்துகிறன். ஆனல், இவனிடமும் பொய் சொல்ல அவன் இவ்வியாபாரியினலேயே தயாராய் விடுகிறன்.




ராமலு:—உன் நண்பர்களைப்பற்றி எப்போதெல்லாம் நினைப்பாய்?

சோமு:—அவர்களுடன் சென்று என் கைதுட்டு செலவில்லாமல் காப்பி சாப்பிட்ட கிளப்புகளைக் காணும்போதெல்லாம் வாயூறியபடி அவர்களைப்பற்றி நினைப்பேன்.

ஃ

ராகவன்:—உன் நாவல் புஸ்தகம் அப்படியே புதிதாக இருக்கிறதே?

விஜயன்:—இன்னும் எவருக்கும் இரவல் கொடுத்து அதைப் பழயதாக்க வில்லை. ஃ

நிருபர்:—ஆசிரியரவர்களே! இந்தக் காலத்தில் ஒருவன் உயரவேண்டுமானால் என்ன செய்யவேண்டும்?

ஆசிரியர்:—முயலுக்கு மூன்றே கால் என்று முதலாளி உலகம் சொன்னால், உடனே ஆம் என்று எஸ் (yes) போடுவது தான் பிழைக்கும் வழி.

ஃ

லைப்ரரி சேவகன்:—ஏனையா பழய பத்திரிகைக்கட்டுகளை யெல்லாம் நெடுக நோண்டிப் பார்க்கிறீர்?

சுந்தரம்:—சென்ற வருஷம் மறியலில் நான் சிறை சென்றவன். என் போட்டோ படம் பத்திரிகைகளில் வந்திருக்கிறதாவென்று பார்க்கிறேன். ஃ

சங்கரன்:—உனக்குப் புத்தி கொஞ்சங்கூடக் காணோமே? என்?

வேலன்:—நான் படித்த எந்தப் பள்ளிக்கூடத்திலும் சம்பளமில்லாதது தான். ஃ

அன்பன்:—நண்பா! காலணா கார்டு என் அரையணா ஆனது?

நண்பன்:—அங்கு மிங்கும் அடிக்கடி பறக்கும் அன்பற்ற கடிதங்களும், துரோகக் கடிதங்களும், கள்ளக் காதற் கடிதங்களும் சற்று குறையுமென்று தான். M. P. துருசாமி நாடார்.

ஃ

தருமன்:—"சுயமரியாதை"யை முன்னிட்டு நீர் என்ன தியாகம் புரிந்து விட்டீர்?

ஆனந்தன்:—என்ன அப்படிச் சொல்லுகிறாய்! சீர்திருத்தத்திற்காக வேண்டித்தான் என் அன்பார்ந்த மனைவியையும் பிள்ளைகளையும் நீக்கி விட்டு ஒரு விதவா விவாகம் புரிந்து கொண்டேன்.

(இந்து சாதனம்—வை. மு.)

ஃ

உபாத்யாயனி:—எண்டி சகுந்தலா! பாட்டுகள் எழுதிக்கொள்ள நேற்று வீட்டுக்கு வரச் சொன்னேனே—என் வரவில்லை?

பாடசாலைப் பெண்:—வீட்டிற்கு வந்தால் உங்கள் மகன் என்னையே விகாரமாக முறைத்துப் பார்க்கிறான். அது பெரிய பயமாயிருக்கிறது.

ஃ

---

பிறருடைய ஸத்தியத்திலும் வாக்குறுதியிலும் நம்பிக்கை தளர்ந்து போன இடத்தில் பிறகு யதார்த்தமான அந்நியோன்னியம் பிரகாசிக்காது.

அவன் :—நம்மை விலக்குகிற ஒரு வனை வசப்படுத்துவ தெப்படி?

இவன் :—அவனுடைய மனைவியை வசப்படுத்திக் கொண்டால் போதும்.

---

—"பெண்ணே, உன்னை என்னவோ மாப்பிள்ளை அழைக்கிறாரு"
—"எங்கே இருக்கிறாரு?"
—"கட்டிலிலே!"

---

—"கல்யாணம் என்றாலே முகத்தைத் திருப்பிக் கொள்கிறாயே? நாளைக்குக் குழந்தையைப் பெற்றுப் பால் கொடுக்கும்போது எப்படி யிருப்பாய்?"

"உங்களைப்போல் உப்பிப்போய் முழுதும் மாறி யிருப்பேன்."

---

நொண்டி :—பிறக்கும் போதே உனக்கு பாதிகையில்லையா? அடடா! என்ன பாவம்! ஒரு வீணை வாங்கிக் கொடுக்கட்டுமா? வாசிக்கிறாயா?

முடவன்:—அப்பா! எனக்குத்தான் வலது கையில்லை. உனக்குஏன் இடது கால் காணோம்? ஒரு ஸைகில் தருகிறேன், சுகமாக ஏறிப்போகிறாயா?

---

ஐயர் :—உங்கள் வீட்டில் இன்று என்ன சோறு குழம்பு?

சாயபு :—நம்ம குழம்பு சோறு உங்களுக்குச் சொல்லக் கூடாதே!

---

தகப்பனார் :—இனி அந்தப் பயல் வீட்டிற்குப் போகாதே. என்றைக்கும் என் வீட்டிலேயே இருந்து விடு.

பெண் :—இந்த வீடு பிறகு என் தம்பியின் மனைவி வீடாகி விடும். என் சொந்தவீடு என் புருஷன் வீடுதான்.

---

நக்து :—கேட்டியாடி சங்கதியே! நான் சேஷியைத் தேடிக்கொண்டு வீட்டுக்குள் போனேன். எங்கேயும் அவளைக்காணோம். அப்பாலே கொட்டடிக்குள் போய்விட்டேன்.

அலமேலு :—அப்புறம்! அப்புறம்!

நக்து :—நான்தான் சொல்லிக் கொண்டு வருகிறேனே? அதற்குள் ஏண்டியம்மா அவ்வளவு ஆத்திரம்? உள்ளே போனேன். பார்வதி பரமே சுவரர்களாக இருந்தார்கள். ஏன் வந்தோமென்று ஓடிவந்து விட்டேன்.

---

"ஆசையை ஒரு அளவில் அடக்கிக் கிரமமாக இருப்பதெப்படி?"

"ஒரு பெண்ணை விவாகம் செய்துகொண்டு பார். அவள் உன்னை ஒழுங்கான மனிதனாக்கி விடுவாள்."

---

ரங்கம்மா :—அடியேன் தாஸனி, அங்கம்மா! கக்கத்திலே மறைத்து வைத்திருக்கிறது என்ன அம்மா?

அங்கம்மா :—ஸ்ரீமதே ராமாநுஜாய நம: ஆறணா அம்மா குறவை மீனு.

ரங்கம்மா :—அடியேன் தாஸனி, அங்கம்மா, ரொம்ப நயம், ஒரு சட்டி குழம்பாகும். போய் வாருங்களம்மா.

---

தனக்கு எவர்களால் இவ்வுலக மகிழ்வோ அவர்கள் மரணமடைந்தும், இருக்கிற இரண்டொருவரும் ஜென்ம விரோதத்துடன் விலகியும் போய்விடுவராகில் சீக்கிரம் அவற்றை மறந்துவிடுவதே சாந்திக்கான வழி.

# தன்மதிப்பு—ஒரு பிறவிக்குணம்.



உயர்ந்த செல்வத்திலிருந்த தன் தந்தை ஏழ்மைப் பட்டுவிடவே, அவரது தங்கையான தன் அத்தையின் வீட்டிற்கு ஒரு சிறுவன் சென்று, அங்கு வீணில் உட்கார்ந்து உண்ணுவதற்கு மனமின்றி, அத்தையின் கணவன் வியாபாரியாதலின் அவரது கடையில் கணக்கு எழுதும் வேலை செய்து வீட்டில் புசித்தபடியிருந்தான். ஒரு நாள் மத்தியானம் புசித்து விட்டுக் கடைக்குச் செல்லும் போது அவன் அத்தை சாதம் கட்டி வைத்து அதைக் கடையிலிருக்கும் மாமாவுக்குக் கொண்டுபோ என்றாள். சிறுவன் கபடமற்று அவ்விதமே செய்தான். மறுதினம் பகலில் வந்து புசித்துக் கொண்டிருக்கையில் தன் அத்தை சாதம் கட்டுவதைக் கவனித்துக் கொண்டு மௌனமாய் போஜனத்தை முடித்துஎழுந்தான். அத்தை உடனே "சாதத்தை எடுத்துக் கொண்டுபோ" என்றாள். ஃ

சிறுவனுக்கு ஆத்திர முண்டாயிற்று. "அத்தையே! நான் சோற்று மூட்டை தூக்குகிறவனல்ல. அதற்கு நீ வேறொரு கூலி மனிதனை ஏற்படுத்திக்கொள்ளவேண்டும். அவசாத்துக்கு எந்த இழிந்த வேலையையும் எவருமே செய்யவேண்டியதுதான். அவ்விதமே நானும் நேற்று சாதம் கொண்டு போனேன். இன்று அது வழக்கத்தில் வந்து விட்டது போல் நினைத்துக் கொண்டு, ஏதோ பழகிப்போன சாதாரணச் சொல்லின் மாதிரியாக சாதத்தை எடுத்துக்கொண்டு போவென்று சொல்லி விட்டாய். நான் இப்பொழுது எவ்வளவு கேவலப்பட்ட நிலையிலிருந்தாலும் ஈனமான காரியங்களைச் செய்ய என் மனம் ஒப்பாது. என்னை ஆஸ்பத்திரிக்குச் சென்று நாள் தோறும் மருந்து வாங்கிவரச் சொன்னால் அதற்கு நான் மறுக்கமாட்டேன். அது கேவலமல்ல. பிணிவாய்ப்பட்டோருக்கு எவரும் பணி செய்ய வேண்டியதே. இந்தச் சோற்று மூட்டையை இங்கிருந்து ஒரு மைல் தூரம் இந்தக் கடும் வெயிலில் தோளில் எடுத்துக் கொண்டு வியர்வைசொட்டத் தூக்கிச் செல்லும் சங்கதி அவ்விதமல்ல. இது என்னைக் கேவலப்படுத்துவதற்கு முதலில் போட்ட படி. இதற்கெல்லாம் நான் உட்பட முடியாது என்று கூறிச் சென்று விட்டான். அத்தை திகைத்து நின்றாள். ஃ

கடைக்குச் சென்றதும் அத்தையின் புருஷன் "சோறு ஏனடா கொண்டுவரவில்லை?" என்றார். "அதற்கு நான் நீங்கள் வைத்த ஆளல்ல. அந்த வேலைக்கு இன்னொருவரைஏற்படுத்திக்கொள்ள வேண்டும்" என்று கூறிக் கடைக்குள் சென்றான். அத்தையின் கணவனும் மௌனமாய் எழுந்து புசிக்க வீட்டை நோக்கி நடந்தார். ஃ

பிறகு ஒரு நாள் இச்சிறுவன் தன் நண்பனின் வீட்டிற்குச் சென்றான். அங்கு நண்பனின் தாய் குளிர் சுரத்துடன் நடுங்கியபடி படுத்திருந்தாள். இவனைக் கண்டதும் அன்புடன் அழைத்து என்மேல் படுத்துக்கொள் என்றாள். சிறுவனும் குளிரால்தூக்கித் தூக்கிப் போடும் அவளை அணைத்துக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டான்.

"அப்பா! குழம்பு வைத்து விட்டேன் சாதம் அடுப்பில் இருக்கிறது; அதை வடிக்கிறதற்குள் ஜ்வரம் வந்து விட்டது" என்றாள். சிறுவன் உள்ளே சென்று சாதத்தை வடித்துவிட்டு சமையல் அறையைத் துடைப்பம் எடுத்துச் சுத்தி செய்து அந்த அம்மைக்கு சாதத்தில் குழம்பு விட்டுப் பிசைந்து கொண்டுவந்து வைத்தான். தினமும் அவளே தன் குமாரனுக்கு சாதம் கொண்டு போவது வழக்கமென்பதைச் சிறுவன் அறிவானானதால் அவளுக்குத் தெரியாமல் சாதம் கட்டிக்கொண்டு தன் நண்பனுக்குக் கொடுத்து விட்டு வந்தான். இரவு அந்த நண்பன் வீட்டிற்கு வந்து, தன் தாயை நோக்கி, அவனிடம் ஏன் சாதம் கட்டிக் கொடுத்தாய்? அவன் எவ்வளவு செல்வாக்கிலிருந்தவன் என்று கோபிக்க, அதைக் கேட்டுக் கொண்டே சிறுவனும் உள் நுழைந்தான். அவன் அந்த வேலையைச் செய்திருக்கக் கூடாதென்று அந்த அம்மை கோபித்துக் கொண்டாள். சிறுவன் சிரித்தபடி, அம்மா உனக்கு என்னைப் பற்றிக் கௌரவமான எண்ணமிருப்பதால் நான் சாதம் கொண்டு போனது கேவலம் என்றுகோபிக்கிறாய். என் அத்தைக்கு என்னைப்பற்றித் தாழ்வான எண்ணமிருப்பதால் நான் சாதம் கொண்டு போவது இழிவென்று அவள் நெஞ்சிற்படவில்லை. அவமதிக்கிற அத்தையிடம் என் மானத்தைக் காத்துக் கொண்டு, என்தன் மதிப்பை யுணர்த்தவேண்டியது அவசியமே. இங்கோ அன்பு சங்கதியாதலின் எந்தக் கேவலமும் கிடையாது என்று அத்தை சாதம் கட்டிக் கொடுத்த சங்கதிகளைக் கூறினான். பிற்காலத்திலும் இச்சிறுவன் தன்மதிப்புடனேயே தன் தலையை எவருக்கும் குனியவைக்காமல் உயரிய நிலையில் வாழ்வதானான். எனவே, தன்மதிப்பு என்பது பிறவிக் குணத்துடன் சேர்ந்ததேயாகும். இத்தகையோர் எவ்வளவு இழிந்த நிலையிலுங்கூடத் தன்மதிப்பையே மிகப் பெரிதாக நினைத்துப் போற்றுவர்.

## பழகினால் சரியாய்விடும்.

நாணிக் கோணுகிறவர்களெல்லாம் பழகினால் எல்லாம் சரியாய்விடுவார்கள். வேண்டாமென வெறுத்த கருப்புக்குட்டியுடனும் பழகிப்போனால் பிறகு அவளே ரம்பையாகத் தோன்றுவாள். முதலில் மனம் கூசிய புது இடமும் பிறகு பழக்கத்தால் சாதாரணமாய்விடும். மனைவி மக்களைவிட்டுப் பிரியமுடியாதென்றவன், அவர்களைப் பிரிய நேர்ந்து பழகிச் சில தினங்களும் கடந்துவிட்டால் பிறகு மனம் வருந்தாது தேறிவிடும். தனக்கு செய்யத் தெரியாத எந்த வேலையும், புது உத்தியோகமும் பிறகு பழகிப் போனால் சரியாய்விடும். எதுவும் முதல் தினம் சற்று சிரமம் தான். பிறகு சரியாய்விடும். பழக்கப்பட்டுப்போகும்.



# பெரியாரின் மொழிகள்



(358-ம் பக்கத் தொடர்ச்சி.)

714. Trust men, and they will be true to you; treat them greatly; and they will show themselves great. EMERSON.

நீ மற்றவர்களை நம்பினால் அவர்கள் உன்னிடம் உண்மையாய் நடப்பார்கள். அவர்களைப் பெருமையாய் நடத்தினால் அவர்கள் பெருந்தன்மையாய் நடந்துகொள்வார்கள். எமர்சன்.

715. And, doubtless, unto thee is given A life that bears immortal fruit, In those great offices that suit The full-grown energies of heaven. TENNYSON.

என்றும் அழியாத ரசம் நிறைந்த பழமாகிய உயிரை உன்னிடம் ஒப்புவிக்கப்பட்டிருக்கிறது. அதைச் சரிவர உபயோகித்து நல்வழியில் நடத்திச் சென்றால் மோக்ஷ சாம்பிராஜ்யம் அடைவது திண்ணம். டெனிசன்.

716. Golden visions wave and hover, Golden vapours, waters streaming, Landscapes moving, changing, gleaming, I am like a happy lover Who illumines life with dreaming!

LONGFELLOW.

சொர்ணமயமான சொரூப அலைகள் சுற்றிலும் தோன்றுகின்றன. தங்கமயமான புகை சுற்றி நிற்கிறது. தண்ணீர் ஓடிக்கொண்டிருக்கிறது. நிலங்கள் நகர்ந்துகொண்டும், மாறிக்கொண்டும் ஜீவித்துக்கொண்டும் இருக்கின்றன. நான் கனவு கண்டுகொண்டிருக்கும் ஒரு பெண் மயக்கங்கொண்ட பித்தனாய் நிற்கிறேன்.

லாங்பெலோ.

717. There are some people who can be merry and can't be wise, and some who can be wise (or think they can,) and can't be merry. DICKENS.

சந்தோஷமாயிருக்கக் கூடியவர்கள் சிலர் இருக்கிறார்கள். ஆனால், அவர்கள் புத்திசாலிகளாயில்லை. புத்திசாலிகளாயிருக்கப்பட்டவர்கள் (அல்லது புத்திசாலிகளெனத் தங்களுக்குத்தாங்களே நினைக்கப்பட்டவர்கள்) சந்தோஷமாயிருப்பதில்லை. டிக்கேன்ஸ்.

718. The wisdom of life is in preventing all the evil we can; and using what is inevitable to the best purpose. RUSKIN.

கெடுதல்களை வாராதபடி தடுப்பதும், ஏற்பட்டுவிட்டால் கூடியவரை அவைகளை நல்ல வழியில் திருப்புவதுந்தான் ஞானவான்களுடைய செய்கையாகும். ரஸ்கின்.

719. Know that we must trust and hope, and neither doubt ourselves, nor doubt the Good in one another. DICKENS.

மற்றவர்களிடம் அவநம்பிக்கை கொள்ளாமலும், அவர்கள் நற்குணத்

---

பிறர் கபடமணிகளாவதும், விலகுவதும், தாங்கள் அவர்களிடம் நடந்துகொள்ளும் கபடகுணத்தால் தான் என்பதை வெகு பேர் அறிவதில்லை.

தைப்பற்றி சந்தேகப்படாமலும், நம் பிக்கையுடன் எதிர்பார்த்திரு.

டிக்கேன்ஸ்.

720. But who shall dare the Gate of Life to close, And say, thus far the stream of mercy flows? FELICIA HEMANS.

உயிர் எப்போது பிரியுமெனவும், தயை என்னும் நதி எவ்வளவு தூரம் பாயுமெனவும் காண்பார் யார்?

பெலிஸிய ஹேமான்ஸ்.

721. Then come the wild weather, come sleet or come snow, We will stand by each other, however it blow.

LONGFELLOW.

அக்கினியாறு எதிர்படினும், பிர ளயகாலம் வரினும், வானம் இடிந்து விழினும், வேறு என்ன சம்பவிக்கி னும் நாம் ஒருவரைவிட்டு ஒருவர் பிரியோம். லாங்பேலோ.

## வெளியே ஒன்று, உள்ளே ஒன்று.

சிலர் வெளிக்கு வெகு அன்னியோன்னியமா யிருக்கி றார்கள். இருவரும் சேர்ந்தே எந்த இடத்திற்கும் செல் லுகிறார்கள். ஒரு காரியத்தில் இருவரும் பங்கு கொள்கி றார்கள். உள்ளுக்கோ ஒருவர்மீதொருவர் ஆத்திரமடைகி றார்கள். மூன்றாவது மனிதனிடம் இருவரும் ஒருவரைப் பற்றி யொருவர் கோள் சொல்லுகிறார்கள். ஒருவரை யொருவர் தாழ்த்திப் பேசுகிறார்கள். பிறகு இருவரும் சேர்ந்து அத்யந்த நண்பர்களாக மூன்றாவது மனிதனிடம் வந்து குலாவுகிறார்கள். இவ்விருவர்களிடமும் மூன்றாவது மனிதன், நாய் தன் அரிப்பைத் தீர்த்துக்கொள்ளத் தேய்க் கிற குட்டிச்சுவர்போல் பொதுவில் நின்று நடந்துகொள்ள வேண்டியவனாகிறான் இதில் சிறிது தவறி ஏதாவது பேசி விடினோ இருவரும் தன்னைத் தூஷிக்கத் தொடங்கிவிடலா மென்று மூன்றாவது மனிதன் அஞ்சவும் நேருகிறது. ஒருவர் சொன்ன புகாரை மற்றவரிடம் கேட்டுவிடினோ, அந்தப் புகாரைக் கூறியவர் நான் சொன்னதை அவரிடம் ஏன் கேட்டீர்கள்; அவர் என்னைத்திட்டுகிறாரே என்று கோபி க்கத் தொடங்கிவிடுகிறார். இது வலிய வரும் சங்கடம்!

காய்கறி மார்க்கட்டை முன் இருந்த இடத்திலிருந்து அதிக தூரத்திற்கு மாற்றி விடுகிறபோது ஆரம்பத்தில் அந்த இடம் வெகு தூரமாய்த் தோற்று கிறது. பிறகோ அவ்வளவு தூரம் நடந்து நடந்து வழக்கப்பட்டு விடுவதில் தூரம் என்ற கஷ்டம் மாறிச் சமீபமாய் விடுகிறது. மாமி வீடும் இப்படியே!




## 3. இல்லறம்.

(344-ம் பக்கத் தொடர்ச்சி.)

238. "மனைக்கோடி யில்லாத மனை பாழ்."

239. "மனைவி யில்லாத புருஷன் அரை புருஷன்."

மனைவியின் அருமை அவள் இல்லாத காலத்தில் தான் தெரியும். மனைவியையும் குழந்தைகளையும் அவள் தாய் வீட்டுக்கு அனுப்பிவிட்டுத் தான் ஒண்டி மரமாய் வீட்டில் தனித்திருக்கும் போதும் அறியலாகும். மனைவிக்கு ஒரு வியாதி வந்து அதனால் வீட்டு வேலைகளைத்தானே கவனிக்கும்படியாகும் போதும், மனைவி மாதவிலக்காகி வீட்டுக்காரியங்களைப் பார்ப்பதற் கில்லாத போதும் அவன் துணையற்ற ஆடவன் அரைமனிதனாகவே கருதப்பட நேரும். அந்த சமயத்தில் விலக்க முடியாத விருந்துகள் வந்து விடினோ இன்னும் அதிக சோதனை யாகிவிடும். இது மனைவியிருந்தும் சமயத்துக்கு உதவாமற்போகுங் காலங்களில் சொல்லப்படும் பழமொழி. இதன் மற்றொரு பொருளாவது:—ஒருவனுக்கு ஒரு பெண்ணின் துணை அவசிய மென்பதும், விவாகமற்றவன் அரை மனிதனே யாவானென்பதுமாம். விவாகமானவன் தனித்து ஒருவர் வீட்டில் தங்கச்சென்றால் அவனை வித்தியாசமாக நினையார். ஏனெனில், அவனுக்கு விவாகமாகி ஒரு குடித்தனக்காரனாக இருப்பதால் யோக்கிய முள்ளவனாகவே பாராட்டுவார்கள். அவன் ஒரு வேலையாகப்போன இடத்தில் ஒரு அறை வாடகைக்கு எடுத்துக்கொண்டு அங்கு தங்கித் தானே சமைத்துப் புசிப்பதா யிருந்தாலும் அதற்கு அங்குள்ள பெண்களும் ஒத்துப் போவார்கள். ஏனெனில், அவன் தன் மனைவியைப் பிரிந்து அதிக நாள் இரான் என்பதும், அவன் ஒரு பெண்ணுக்குப் புருஷன் என்பதும் அங்கு அவனுக்கு ஒரு மதிப்பையும் பச்சாத்தாபத்தையும் கொடுப்பதால் தான். விவாகமே யில்லாதவன் இவ்விதம் ஒருவீட்டில் ஒரு அறையைப் பேசிக்கொண்டு தங்கமுயன்றாலோ அதற்கு வீட்டார் சம்மதியார். பெண்கள் உள்ள இடத்தில் ஒண்டியான ஆண்மகன் இருப்பது கூடாதென்றும், இரவில் தெருத்திண்ணையில் படுப்பதுகூடச் சரியல்லவென்றும் ஆக்ஷேபம் செய்வார்கள். குடியிருக்கவும் ஒப்பார்கள். இது விவாகமானவனுக்கும் விவாகமற்றவனுக்கும் உள்ள பேதமாகும். இனி, ஒருவன் தன் மனைவியுடனே ஒரு வீட்டில் இடம்பேசிக்கொண்டு குடியிருக்கச் செல்வதானால் அதற்கு ஆக்ஷேபிப்போர் எவரும் கிடையார். அவர்களை வருக வருக என்று அழைப்பார். தனி மரியாதையும் கௌரவமும் கொடுத்து எல்லா உதவிகளும் அவர்களுக்குச் செய்வார்கள். அதை ஒரு குடித்தனமென்று சிலாகிப்பார்கள். இது மனைவியோடும் வாழும் வாழ்க்கைக்கு உலகத்தார் கொடுக்கும் மதிப்பை

---

முன்பின் அறியாதவர்களும் கடவுளின் தூண்டுதலால் உபகாரம் செய்ய முன் வந்து விடுவதுண்டு. அது அந்தந்த வேளையில் கூடிவிடும் காரியம்.

விளக்குவதாகும். இனி, இன்னொரு கருத்துமுண்டு. மனைவியை இறக்கக் கொடுத்தோன், அவள் இல்லாத வீட்டைப் பார்த்து "மனைக்கொடியில்லாத மனைபாழ்" என்று சொல்லிக்கொண்டு கண்ணீர் சிந்தும் வகையிலும் இப்பழமொழி உபயோகமாகும். அவ்வாறு சிந்துகையில் "மனைவியில்லாத புருஷன் அரைபுருஷன்" என்று தனக்குள்ளாகவே சொல்லிக்கொண்டு நொந்து படவும் வரும். ஆகவே, மற்றொரு விவாகம் செய்து கொண்டாவது தன் துக்கத்தை மறக்கப் பார்க்கலாமா என்று பலயோசனைகள் செய்யத் தலைப்படுவான். இவ்வாருகப் பல சந்தர்ப்பங்களுக்கும் இவ்விரு பழமொழிகளும் பயன்படும்.

240 "பெண்டாட்டி ஆசை திண்டாட்டத்தில் விட்டது."

ஒருவனுக்கு விவாகமாவதற்கு முன் ஒருமித்து அவனோடு அன்பாயிருந்தவர்கள், அவனுக்கு மனைவி வந்ததும், அந்த வகையில் ஏதாவது மனஸ்தாபங்கள் தோன்றிக்கொண்டு, அதைப் பிரமாதமாகச் செய்து, அவனைப் பகைத்துப் பிரிந்து, அவன் தன் மனைவியின் பேச்சையே வேதவாக்கியமாகக் கேட்கிறான் என்பார்கள். இவனுக்கும் பெண்டாட்டி ஆசையும் போதும், அது திண்டாட்டத்தில் விட்டதும் போதும் என்று தோன்றும்.

241. "பெண்டாட்டியுடன் கோபித்துப் பரதேசம் போவாருண்டா?"

போனவர்களும் இருக்கிறார்கள். ஆனால், அது அதிகமில்லை. அத்தகையோர் எங்கோ இரண்டொருவர்தான். அவர்கள் சம்பாதிக்க திறனற்றவர்களாயும் இருக்கலாம். அதனால் வேற்றூர்சென்றுமிருக்கலாம். மனைவியுடன் எவ்வளவுகோபித்துக்கொண்டாலும், பிறகுதான் உண்ணும்சாதம் அவள்சமைத்தே வரவேண்டியிருப்பதாலும், சுற்றிச் சுற்றிக் கடைசியில் அவன் ஒருத்தியே தான் தனக்குத் துணையென்று தெரிய வருவதனாலும், தான் கொண்ட கோப ஆத்திரங்களை ஒரு விதமாக மறந்து மறுபடியும் வீட்டுடனேயே இருக்கப் புத்தி போகிறது. மேலும், அவன் குடும்பம் சிதறிச் சின்ன பின்னமானது என்று மற்றவர்கள் பழிக்காதிருக்கவும் மனைவியோடு ஒட்டி வாழ்ந்து தன் குடும்பத்திற்கு வெளி மதிப்பில் ஒரு கௌரவத்தைத் தான் தேடி வைக்க வேண்டியிருப்பதால் அதன் பொருட்டாகவும் தன் கோபத்தை விட்டு அவளோடுங் கூடிக் குடித்தனம் செய்ய வேண்டி வருகிறது. பரதேசம் போய் விடுவோமா வென்கிற நினைவெல்லாம் அந்த ஆத்திர சமயத்திற்குத் தோன்றுகிறதே தவிர, பிறகு அது நீடிப்பதில்லை. சற்று நேரத்திற் கெல்லாம், அல்லது மறுதினத்திலாவது சண்டைக்காரியாயிருந்த மனைவி குணசாலியாய் மாறித் தன்னை வேண்டியழைத்து உபசரிக்க வரும்போது இவனும் நேற்றைய பரதேசப் பிரயாண தீர்மானத்தை மாற்றி விட்டு அவளோடு ஒன்றுபட்டுப் போகிறான். ஆகவே, பரதேசம் போக விடாதபடி மனைவியின் பாசம் நடுவே நின்று தடுப்பதைக் குறிக்கும் வகையில் இப்பழமொழி உபயோகமாகும்.

242. "பெண்சாதி கால்கட்டு, பிள்ளை வாய்க்கட்டு."

இவ்விடம் சிக்கிக்கொண்டு இந்தப்பாடு படுகிறதைவிட எங்கேயாவது போய் விடலாம் என்று நினைக்கும்போது பெண்சாதியினிடத்துத்தான் வைத்துள்ள ஆசையும், தான் போய்விட்டால் அவள் புசிப்புக்கு என்னபாடு படுவாளோ என்ற பச்சாத்தாபமும் ஆடவனுக்கு ஒரு கால் கட்டாக ஏற்பட்டு

அவன் காலை எங்கும் போகாதபடி தடுத்து வீட்டுடனேயே இருக்கும்படி கட்டிப்போடுமாம். அவ்விதமே, தான் உண்ணாமல் எதையும் பிள்ளைகளுக்குக் கொடுக்கும்படியாகப் பிள்ளை பெற்றவனின் வாயும் கட்டுண்டு போகுமாம். ஒருவர் தனக்கு ஒரு பக்ஷணம் கொடுத்தாலும் அதை அங்கேயே புசித்து விடாமல், குழந்தை பிரியமாகத் தின்பானே யென்று பத்திரப்படுத்தி வைத்து அக்குழந்தைக்குக்கொண்டு வந்து கொடுக்கும்படி புத்தி போகுமாம்.

243. "பெண்சாதி முகத்தைப் பார்க்கா விட்டாலும், பிள்ளை முகத்தைப் பார்க்கவேண்டும்."

மனைவிமீது கோபித்துக்கொண்டு எங்கேனும் சென்றுவிட நினைப்பவன், எந்தக்குற்றமும் செய்யாத—இவ்வுலகில் தன்னையே கதியென்று நம்பியிருக்கிற குழந்தைகளின் முகத்தைப் பார்த்தேனும் அவர்கள் தவித்து அனாதைகளாகாதபடி தான் வீட்டுடன் இருந்து வாழப் பார்க்கவேண்டுமென்று இப்பழமொழி எடுத்துக் காட்டுகிறது. மனைவியின் ஆசையை மறந்தாலும் மக்களின் ஆசையை மறக்கமுடியாது. மக்கள் சுகப்படுவதற்குத் தன் மனைவியின் துணை அவசியம் வேண்டும். மனைவி எவ்வளவு பொல்லாதவளானாலும், தன் மக்களுக்கு அவளே இனிய தாய் ஆவாள். அந்தத் தாய் ஸ்தானத்தில் தன் மக்களுக்கு அவளைத் தவிர வேறெவரையும் கொண்டு வந்து வைக்க முடியாது. ஆதலின், தன் குழந்தைகளின் க்ஷேமத்தைக் கருதியாவது தன் மனையாளுடன் குடித்தனமாயிருந்து வாழவேண்டிவரும். ஆகவே, பிரிந்துபோய் விடக்கூடாது என்று இப்பழமொழி வற்புறுத்துகிறது. (தொடரும்.)

## சில புஸ்தகங்களின் போக்கு.

அநேக பக்கங்கள் கொண்டிருந்தும் கடைசியில் சத்தான விஷயங்கள் என்னவென்று பார்க்கும்போது ஒரு விஷயத்தையுமே காண முடிகிறதில்லை. ஏதோ வழவழவென்று நெடுக எழுதப்பட்டிருப்பதைத் தவிர, பாஷா நயமேனும், பொறுக்கிக்கொள்ளக்கூடிய அரிய விஷயங்களேனும் அதில் தென்படுவதில்லை. ரயில் வரும்வரையில், அல்லது ரயிலிற் செல்லுகையில் ஏதோ பொழுது போக்குக்காக வாசித்து அந்த ரயிலிலேயே அதை விட்டெறிந்து போகக்கூடியதான வகைக்குமட்டுமே உதவியா யிருக்கின்றன. அவற்றைப் பத்திரப்படுத்தவும் நினைவு தோன்றுவதில்லை. ஒரு நூலில் அரிய விஷயங்கள் இருப்பின், அது செல்லரித்திருப்பினும் எவ்வளவோ ஆவலுடன் பெட்டியில் வைத்துப் பொன்போல் போற்றுகிறார்கள். அத்தகைய நூல் காணாமற்போயின் அவர்களின் உயிரே வாடிவிடுகின்றது.

# இளைப்பாறுவதின் ரகசியம்.



மனைவி மக்களைத் தாய் வீட்டுக்கு அனுப்பி விட்டு ஹோட்டலில் புசிப்பு கொள்பவன் காய் கறிகளைப் பார்க்கும் பொழுது, அப்பாடா! தினமும் இவற்றை வாங்கிக் கொண்டு சுமந்து போனது போதும். இப்பொழுது இந்தக் காய் கறியின் தொல்லையே நமக்கு இல்லையென்று சொல்லிக் கொண்டு ஸந்தோஷிக்கிறான். அதிக வேலை செய்தவன் இளைப்பாறுதல் போல் அவனும் இப்பொழுது இளைப்பாறுகிறான். இளைப்பாறுவதில் உள்ள ஒரு விசேஷமென்ன வெனில், நாளைக்குச் சுமக்க வேண்டி யிருக்கிற ஒரு பளுவைச் சிந்தித்தவாருக இன்று களைப்புடன் இளைப்பாறுவதில் தான் அதிக இன்பம் இருக்கிறது. நாளைக்கு மனைவி மக்கள் தன் வீட்டிற்குத் திரும்பி வந்துவிட, மறுபடியும் இவன் காய் கறி கடைக்கு ஓட வேண்டிய ஒரு பளுவை ஒரு புறம் வைத்துக் கொண்டு இன்று இளைப்பாறுவதில் தான் அதிக சுவையுண்டு. அவ்வாறின்றி, மனைவிமக்களை நமனுக்கு விருந்தாக்கிவிட்டுள்ள ஒருவன் காய் கறிகள் இனி வாங்க வேண்டியதில்லையென்று இளைப்பாறுவானுயின் அதில் ஒரு இன்பமுமே காணுன். பக்கத்தில் எந்தப் பளுவும் இல்லாமையால் அதில் எவ்வித ருசிகாமும் அவனுக்குத் தோன்ருது.

ஃ

ஒரு உத்தியோகத்திலுள்ளவன் ஞாயிற்றுக்கிழமையன்று இன்றைக்கு வேலையில்லை யென்று இளைப்பாறுகையில் மறுதினம் வேலைக்குச் செல்ல வேண்டி யிருப்பதால், அந்த ஒய்வு அளப்பரிய இன்பமானதாகிறது. அவ்விதமின்றி, உத்தியோகமேதொலைந்து விட்டவனுக்கு இனி நமக்கு ஒய்வு தான் என்பதில் ஒரு துளி இன்பமும் இருக்க முடியாது. அது சோம்பலில் தான் படுக்க வைக்கும்.

ஃ

மீண்டும் சந்திப்போம் என்று இரு நண்பர்களும் நம்பிக்கொண்டு பிரிவதில் இன்பம் இருக்கலாம். பிரிந்து அன்னேர் இளைப்பாறுகையில் அந்த இன்பம் பெருகியும் தோன்றலாம். இது தான் கடைசி சந்திப்பென்று பிரிந்து இளைப்பாறுதலில் எந்த இன்பம் அங்கு நிலவமாட்டா. கலவி நுகர்ந்து இளைப்பாறுகையில் பின்னரும் நுகர்தல் கூடும் என்ற நினைவில் அந்த இளைப்பாறுதலும் இன்பம் நிறைந்ததாகிறது. பின்னுக்கில்லை—இதுவே கடைசி என்று நுகர நேரின், அங்கு தோன்றும் இளைப்பாறுதலில் எந்த ரம்மியமும் காண இயலா. ஒரு பெரும் மூட்டையைத் தூக்கி வந்தோனுக்கு ஓரிடத்தில் இறக்கி வைத்து இளைப்பாறுவதில் மறுபடியும் மூட்டை தூக்க வேண்டி யிருப்பதால் அவனது இளைப்பாறவில் இன்பம் இருக்கிறது. அங்ஙனமின்றிப் பாற் குடத்தைத் தூக்கி வந்தோன் அதை நடுவே சாலிடறிப் போட்டுடைத்து விட்டு பின்னுக்குத் தூக்கிச் செல்ல வேண்டிய பளுவு எதுமில்லாதிருக்கையில் அங்கு அவன் இளைப்பாற முயலுதல் ஒரு போதும் ருசிக்காது. தான்செலவிட்ட தொகைக்குப் பத்து பங்கு லாபம் கிடைக்குமென்று நினைப்போன், இடையே இளைப்பாறுவதில் அவனுக்குஉற்சாகம்

ஏற்படலாம். அவ்விதமின்றிச் செல விட்டு எதிர்பார்த்ததும் கிடைக்காமல் நஷ்டமாகி ஏமாறியவனுக்கு எந்த இளைப்பாறுதலுமில்லை, இன்பமு மில்லை. ஃ

கணவனைப் பிரிந்து தாய் வீட் டைக் காண ஆவலுடன் வந்த நங் கைக்கு, மறுபடியும் பிரிந்து கணவனி டம் சென்று விட வேண்டு மென்ற பளுவுடனிருக்கையில், தாய் வீட்டில் இளைப்பாறுதலானது பரம சுகமாகத் தோன்றும். இவ்விதமின்றி, கணவ னும் சொத்துக்களும் யாவும் போய்த் தாய் வீடே கதியாக வந்து உட் கார்ந்து கொண்ட பெண்ணுக்கு அங்கு அவள் கொள்ளும் இளைப்பாறு தல் எந்த இன்பமும் தராது. பின்னுக் குத் தான் தாங்கவேண்டிய ஒரு பொறுப்பும் பளுவும் நிர்வகிப்பும் எதிர் பார்ப்பும் ஒரு சார் இருந்துகொண்டு, இடையேயுள்ள நேரத்தில் அவற்றி னின்று சற்று விலகி இளைப்பாறுவ தில் தான் இன்பம் உண்டேயன்றி, பின்னுக்கு எந்தச் சுமையும் பளுவும் இல்லாத விஷயத்தில் எந்த இன்ப முமில்லை, இளைப்பாறுதலு மில்லை.

## எதையும் உடனே எழுதி வை.

பிறகு எழுதுவோமென்று எண்ணாதே. ஓ! நாம் எவ்வளவோ மேதாவி; இந்த சிறிய விஷயம் நமக்கு மறந்தா போகும் என்று நினைக்காதே. மனதில் தோன்றிய கருத்து களை உடனே எழுதிவைக்காவிடில் கடைசியில் நீ ஏமாறி விடுவாய். அந்த அழகிய கருத்து மறுபடி உனக்குத் தோன்றாது. ஞாபகத்திற்கே வாராமல் மறைந்துவிடும். அப்போதப்போதே கணக்கு எழுதிவைத்தால்தான் கணக்கு ஒழுங்காக இருக்கும். நாலு கணக்குகளை மனதில் வைத்துப் பிறகு எழுதப் புகுகையில் ஒரு கணக்குக்கு விவரம் தெரி யாமல் மறைந்தே போகலாம். இவ்விதமே டயிரியிலும் எந்த விஷயத்தையும் எழுதிவை. இப்போது அவை உனக் குப் பயனற்றதாகத் தோற்றினும், பிறகு அந்த விஷயமே உனக்கு வெகு முக்கியமானதாகி, அதில் ஏதும் எழுதி வைக்காதிருந்துவிட்டதற்குஎவ்வளவோ தவித்துப்போவாய்.

அகங்கார சிந்தை குறைந்த படிப்பால் வருகிறது. ஒரு ஊற்றை யிறைக் கும்போது தண்ணீர் கலங்கலாயிருந்து பின்னர் தெளிவாய்ப் பெருகுவது போல முதிர்ந்தபடிப்பை யுடையவர்களின் மனம் நாளடைவில் சாந்தி பெற்று வீண் வியவகாரங்களில் பிரவேசியாமல் அடங்கிவிடும். அத்தகைய புத்திமான் களையே ஸாதுக்களென்கிறோம்.

செலவிடுவதில் குறைவில்லை. முதலில் ஒருவரை அதிருப்திபட வைத்து விட்டுப் பிறகு திருப்தி செய்வதில் என்ன பிரயோஜனம்?

# விபசாரத்தின் பயங்கரம்



விபசாரத்தால் உண்டாகும் வியாதிகள் மிகவும் உபாதிகரமும், இழிவானவையுமாக இருக்கின்றன. நியாய மார்க்கத்தை விட்டு விபசரிப்பவர்களுக்குப் பரலோகத்தில் தண்டனை யிருப்பினும் இல்லா விடினும் இப்பிறப்பில் அவர்கள் அநுபவிக்கும் ரோகங்களின் சங்கடமொன்றே ஜன்ம ஜன்மங்களுக்கும் போதுமானது. இந்த ரோகங்களினால் வரும் வேதனை கண்ணாரக் காண்பவர்களுக்கும், இவற்றின் பாடுகளைக் காதாரக் கேட்பவர்களுக்கும், என்றைச்கும் கெடு நடவடிக்கையில் இஷ்டமுதிக்க மாட்டாதென்று நிச்சயமாய்ச் சொல்லக்கூடும். ஃ

விபசார நோய்கள் மூவகைப்பட்டன :—பிளவை, மேக வெட்டை, கிரந்திப்புண் என்பனவாம். ஸ்திரீ புருஷர்களின் மர்மாவயவங்களில் வியாதியினால் ஜனிக்கும் விஷ நீர்களின் சேர்க்கையினால் இந்நோய்க ளுண்டாகின்றன. இவ்விஷ நீரின் இயற்கையை யநுஸரித்து வேறு வேறு ரோகங்களும் உற்பவிக்கக்கூடும். பிளவைக்கும் மேகத்துக்கும் ஒரே விதமான விஷநீர் காரணமாகும். கிரந்திப் புண்களை யுண்டு பண்ணும் விஷநீர் வேறு விதப்பட்டது. இந்தப் பிணி யுள்ளவர்களைத் தொடுவதினாலும், அவர்களின் துணியைக் கட்டுவதினாலும், அவர்களின் படுக்கைகளில் ஸயனிப்பதனாலும் கூட இந்நோய்கள் பற்றிக்கொள்வதுண்டு. நாவிதர்களின் கத்திகள் மூலமாயும் ஒட்டிக்கொள்ளலாம். ஃ

பிளவைப்பிணி புருஷர்களுக்கு மாத்திரமே யுண்டாகும். புருஷ அவயவம் சிவப்பு நிறம் பாய்ந்து வீங்கி அதன் நுனித்தோல் முன்னும் பின்னும் ஆடவொட்டாமல் மூடிப்போவதுடன், அதனுள் கெடுநாற்ற முள்ள நீரும் ஊறும். அதிகமாகத் தினவும், இருந்திருந்து எரிவும் தோன்றும். இதைத் தக்க சிகிச்சை உடனே செய்து கொள்ளாவிடில் புருஷ அவயவநுனி மேலுக்குமேல் வீங்கி, மேற்றோல் முழுதும் அடைபட்டுப் போய், உட்பக்கம் அழுகுவதற்குத் துவக்கும். அப்படியாயின், சஸ்திர வைத்தியம் செய்ய வேண்டியதாய் நேர்ந்துகொள்ளும். ஃ

விபசார நோய்களில் இரண்டாவது சுக்கிரதோஷம் அல்லது மேக வெட்டை. விஷத்துளிகள் புருஷ அவயவ நுனித்துவார வழியாய் மூத்திரக்கால் வாயிலில் ஏறிச்சென்று அதன் உட்டோலைப் புண்படுத்துவதனால் இவ்வியாதி ஜனிக்கும். தேக சம்பந்தத்திற்குப்பின் மறுதினமே அல்லது 4-5-தினங்களுக்குப் பின் புருஷ அவயவநுனி சிவப்பேறி கொஞ்சம் தினவும் ஒருகால் குத்தலும் காணும். இது வரவரப் பெருகி

---

*பிறனுக்கு உதவி செய்வதிலுள்ள இன்பம் மற்றெதிலுமில்லை. ஆனால், உதவி பெறுவோன் வஞ்சகனாக இல்லாமல் நம்மீது முழு அன்பும் நன்றியும் கொண்ட பரிசுத்தனாக இருந்தால் தான் நமது சந்தோஷமும் நிலைக்கும்.*

நீர் விடுங்காலையில் நீர் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றினதுபோல் மகா கடூர அக்கினி மயமாய் வெளிப்படும். அதைத் தாங்க மெல்லியதான மானுஷ்ய தேகத்துக்கு சக்தியின்றி ஐயோ! ஐயோ! என்று அலறவைத்து விடும். பிறகு நீர்விடுந்தோறும் சிறிது சிறிதாய் சீயும் வரத்தொடங்கும். அது துவக்கத்தில் வெண்மையாகவும் இலேசாகவு மிருந்து மேலுக்கு மேல் அதிகமாய்க் கட்டியாகிக் கொண்டுவந்து மஞ்சள் வர்ணமாகவும், பச்சை நிறமாகவும் மாறும். புருஷ அவயவ நுனியை விரலால் அழுத்தின் வலி தோன்றும். நீர் விடுகையின்போது உண்டாகும் எரிவு நாளுக்கு நாள் முதிர்ந்துவிடும். சிலருக்கு இவ்வெரிச்சலினல் உபாதை தாங்கமாட்டாமல் அதனுல் நீர் சிறிது சிறிதாய் வெளிப்படும்படியாக இருக்கும். ஐயோ! அந்த சமயம் படும் உபாதை நரகதுன்பத்தைச் சாதாரணமானதாய் எண்ணவைத்து விடும். இரவுகளில் துயிலும்பொழுது புருஷ அவயம் புஷ்டித்து பச்சைப் புண்ணுக இருக்கிற புருஷ அவயவ நரம்புகளில் தாக்குவதனுல் அபரிமிதமான வேதனையைத் தரும். ஐயையோ! இந்த வேதனையின் வலி பரமசிவனுக்கே தெரியும் புருஷ அவயவத்தின் அடி நரம்பு சுருங்கி விடுவதனுல் அவயம் புஷ்டிக்கும்பொழுது அந்த அடி நரம்பு அதிர்ச்சிக்காளாகிப் பரலோகத்தை எட்டிப் பார்க்கவைக்கும்! சிலர் நித்திரையில் விழித்துக் கொண்டு ஜலத்தை அவயவத்தில் ஊற்றிக் கொள்வர். சிலர் நனைத்த துணியை அவயவத்தின் மேற் போட்டு அதன் புஷ்டிப்பு குறையும் படிப் பிரயத்தனித்து, ஸ்வாமி! இனி புத்தி வந்தது என்று கதறிக்கொண்டு அழுது தொழுது அஞ்சலி செய்வார்கள்! அந்தோகோ! எவ்வளவு கஷ்டம்! புருஷ அவயவத்தினின்று சொட்டும் சீயைத் தவறுபாட்டினுல் விரல்களில் படவிடினும், கண்களில் அதுபட்டு விடாமல் எப்போதும் கைகளைக் கழுவிக்கொண்டு ஜாக்கிரதையாய் இருக்கவேண்டும். அந்த சீ படுமானுல், கண் வீங்கி முழுதும் குருடுபட்டுப்போனுலும் போகலாமென்று நினைவிலிட்டுக் கொள்ள வேண்டியது. ஃ

இந்த வியாதி தோன்றியபோது முதன் முதலினின்றும் கருத்து கூர்ந்து தகுந்த சிகிச்சை செய்து கொள்ளாத பட்சத்தில் அதிகமான தீங்கு நேரிடும். 20-25-தினங்களுக்குப் பிறகு மூத்திரக்காலிலுள்ள வீக்கம் போய் நீர் விடும்போது உண்டான எரிச்சலும் குறைவு பட்டு வியாதி குணப்பட்டதுபோல் தோன்றும். ஆயினும், நீர் விடுங்காலையில் வெண்மையான சிறு துளிகள் அத்துடன் வந்துவிழும். சிலருக்கு இவ்வாறு அநேக வருடங்கள் வரைக்கும் கூடத் தங்கியிருக்கும். வியாதி குணப்பட்டதுபோல் காணப்படுவது மாயாவித்தையாகும். அதாவது, தேகத்தில் அது நன்ருக ஊறிவிட்ட தென்பது கருத்து. இவ்விதம் ஊறியபிறகு குணப்படுத்துவ தென்பது வெகு கஷ்டமான விஷயமாகப்போய் விடும். ஜலரூபமாக வந்துகொண்டிருந்தசீயானது நார்போல் கெட்டியாகி விழும். இதற்குத் தந்திமேகம் என்று பெயர். இந்த ரோகத்தில் புருஷ அவயவத்தின் மேற்ருேல் வெகு துரிதத்தில் சுருங்கிப்போய் மூடி விடும்.

(தொடரும்.)

---

மிக்க அன்னியோன்னியமாக இருந்த நண்பர்கள் பிறகு உதவாக் கட்டைகளாய்க் கடிதம்கூட எழுத மனமற்றவர்களாய்ப் போய்விடுகிருர்கள். ஏன்?

# சிறுமணித்திரள்

(377-ம் பக்கத் தொடர்ச்சி.)

902. பொன்னாபரணத்திலும் அன்பாபரணம் அதிக விலையுள்ளது.

903. உபசார வார்த்தை உலகில் மலிவுதான். ஆனால், அவைகளில் உண்மையானதோ எங்கோ ஒன்றிரண்டே.

904. தங்கள் அளவில் உண்டு சுகித்திருப்பதே உலக வாழ்க்கையாயின், இன்னொருவர் வீட்டில் ஒப்புவிக்கவேண்டிய பெண் மக்களைத் தாங்கள் வளர்ப்பது அவசியமில்லையே!

905. நம்பிக்கைத் துரோகத்தின் எதிரொலி பிறகு படும்போது தெரியும்.

906. உதட்டளவில் உரைக்கும் நன் மொழிகள் புன்மொழிகளே. அது இருதயத்திலிருந்து வரின் கொம்புத் தேனாகும்.

907. மிருகப் பிராயத்தைவிட மனிதன் உயர்ந்தவனெனக் கருதப்படுகிறது. ஆனால், பலர் மிருகப் பிராயத்தில் இல்லாமலுமில்லை.

908. உயர்ந்த எண்ணம் மனிதனைத் தேவனாக்கும். தாழ்ந்த எண்ணம் மிருகமாக்கும்.

909. இகழ்ச்சி புகழ்ச்சிகளை நம்புவது நம்மையே ஏமாற்றிக் கொண்டது போலாம்.

910. இயந்திரங்கள் மனிதனைவிட விரைவில் வேலை செய்யினும், அதை ஆக்கியது மனித அறிவே.

911. கற்றவர்களெல்லாம் யோக்கியர்களாகவோ, கல்லாதவர்களெல்லாம் அயோக்கியர்களாகவே இருப்பதற்கில்லை.

912. பெண்களின் கண்களில் கருணையையும், அநுக்கிரகத்தையும் கடவுள் அமைத்திருக்கிறார். அது எவர்பாலும் இரங்கி உருகும் தன்மையுடையது.

913. கப்பலில் மாலுமிக்குத் திசைகாட்டும் கருவி உதவி. உலக வாழ்வு செவ்விதாய் நடைபெற நண்பர்கள் உதவி.

914. மருந்து விளம்பரமில்லாத பத்திரிகை அரிது. தற்காலம் நாகரீகம் மனிதனை நோயாளியாக்கி விட்டதா?

915. இன்பமொன்றே தனித்து அனுபவிக்கிறவர்களும், துன்பமொன்றே தனித்து அனுபவிக்கிறவர்களும் உலகில் இல்லை.

916. கிடைத்ததைச் சிறிதாக நினைப்பதில், கிடைத்த இன்பம் மறைந்து விடுகிறது.

917. முற்காலத்தை விட இக்காலம் நாகரீகமே. ஆனால், முற்காலத்து மனிதர்களின் பலம் ஆண்மை இன்றுண்டா?

918. "மதம்" என்கிற வழி காட்டியின் துணையைக் கொண்டல்லாமல் ஒருவன் உலகில் செவ்வனே வாழ்வதற்கில்லை. M. P. குருசாமி நாடார்.

---

ஒரு உயர்வான வஸ்துவை இலவசமாகப் பெற்று ஒரு வந்தனம் கூறிவிட்டால், அதன் விலையைக் கொடுத்து விட்டது போலாய் விடுமாம்.

# பத்திரிகை ஆராய்ச்சி.

## சுயமரியாதை இயக்கம்:—

சுயமரியாதை யியக்கம் சமூக சீர் திருத்தத்தைச் செய்யும் நோக்கத்தோடு, அதாவது பிறப்பினுல் ஒருவரையொருவர் தாழ்ந்தவரென்று கருதி ஒதுக்கிவைக்கும் கொடிய வழக்கத்தை யொழிக்கத் தோன்றியதாகக் கருதப்பட்டு, தேச மகா ஜனங்களால் பெரிதும் ஆதரிக்கப்பட்டு வந்தது. பிறகு, அவ்வியக்கம் மக்களுடைய சுயமரியாதையை மதவுணர்ச்சிதான் கெடுத்து வருகிறதென்று கருதி அம்மதத்தையே யொழித்து விடப் பாடுபட்டு வருவதாகத் தெரிகிறது. இம்முயற்சி கடைசியில் கடவுளே யில்லை யாதலால் மறுமையை நோக்கிய கவலை யாருக்கும் இருக்க வேண்டியதில்லை என்ற உணர்ச்சியை எழுப்பிப் பாபச் செயல்களுக்கு அஞ்சாதிருக்கக்கூடிய குணத்தை மக்களிடைப் பரப்புவதாக அமைந்து விடும். பின்னர் அதனுல் ஏற்படும் கொடுமையை மக்களனுபவிக்கவேண்டியிராமற் போகாது. யதார்த்தவசனி.

ஃ

## குஷ்டரோக நிவர்த்தி:—

குஷ்டரோகம் நிவர்த்திக்கப்பட வேண்டியது அவசியமானதேயாகும். ஆனுல், அதை நிவர்த்திப்பதாகச் சொல்லி சம்பாத்தியத்திற்காக வெளி வருகின்றவர்கள் ஆடம்பரமான விளம்பரங்களினுல் தங்கள் பெயரைப் பலரறியச் செய்துகொள்ளுகிறதாகத் தோன்றுகிறதே யல்லாமல் யாருடைய குஷ்டத்தையாவது தீர்த்திருப்பதாகத் தோன்றவில்லையென்பது பலருடைய அனுபவமாக விருக்கிறதாம். விசாரித்தால் பலபேர் விளம்பரங்களை நம்பிப் பணத்தை யிழந்ததைத் தவிர நோயினின்று நீங்கிய அதிர்ஷ்டத்தைப் பெறவில்லையென்று சொல்லுகிற நோயாளிகள்தான் மிகுதியாக இருக்கிறுர்கள். அசாத்திய ரோகங்களில் ஒன்றுகிய குஷ்டம் ஒரு வேளை பஸ்பத்தால் முன்னுளில் சில மகான்களால் தீர்ந்ததாகக் கதைகள் பல சொல்லப்படுகின்றன. அப் பெரியார்கள் ஒரு பைசாவைக்கூடப்பிரதிப்பிரயோஜனமாகப் பெற்றதில்லையென்றும் சொல்லுகிறுர்கள். ஆதலால், சாதாரண வைத்தியங்களினுலெல்லாம் குஷ்டம் முதலிய அசாத்திய ரோகங்கள் தீர்ந்துவிடுமென்று நம்பிப் பொதுமக்கள் ஏமாறுதிருக்கவேண்டியது அவசியமானதாகும். "யதார்த்தவசனி"

ஃ

## சேமியா:—

நல்ல வெண்மையான கோதுமை
(அமெரிக்கன்) மாவு 21 பவுண்ட்
(இதைத்தான் மரிக்கின் மாவு எனவும் வழங்குகின்றுர்கள்.)
உருளைக்கிழங்கை வேகவைத்து
உடைத்துஉலர்த்தியமாவு 14பவுண்ட்
கொதி வென்னீர் 24 அவுன்ஸ்
சொண்ட சீசா (போத்தல்) 8.

கொதிக்கும் வென்னீரில் மேற்படி இருவகை மாவையும் சிறுகச் சிறுகக் கொட்டிக் கிளரி நன்றுய்ப் பிசைந்தெடுத்து சந்தகைமரம், அல்லது சேமியாக் குழாய்கள் மூலியம் சுத்தமான தாழம்பாய், கோரைப்புல் பாய் முதலிய் எதிலேனும் பிழிந்து உலர்த்தியபின் உபயோகிக்கலாம்.

"இந்திய மித்திரன்"

---

உத்தியோகத்தி லிருந்தபோது அவருக்கு நடந்த வரவேற்புகளை இப்போது காணேம்! அது ஒரு காலம்!




1. நேசனைப்போல ஒருவனுக்குக் கிடைக்கக்கூடிய அவ்வளவு அருமையான பொருளும், அத்தகைய நம்பத்தக்க பாதுகாப்பும் வேறில்லை. ஆனால் அத்தகைய நண்பன் கிடைக்கக் காணோமே!

2. ஆசை வைத்த பொருளை அடையுமட்டும் பெரிய வியாகூலம். அது எங்குளதென்று தேடிக் கண்டறிவதிலும் பெரிய கஷ்டம். அதை அடைந்த பின்பு இடையூறு நேரிடின் அனுபவிக்கக் கொடுத்து வைக்கவில்லையே என்ற ஏக்கம்.

3. சிறுவரின் மனம் நிலை பெறாதது. அப்போது தான் முளைத்தெழும் ஒரு மரம் போன்றது. எப்படி வளைக்கிறோமோ அப்படியே வளையுந் தன்மையது.

4. வைத்திய நூலைப் படித்து அதில் கூறியிருக்கும் முறைபடி நாமே மருந்து தயார் செய்து சாப்பிடுவதற்கும், அனுபவமுடைய ஒரு வைத்தியர் நமது கையைப் பார்த்து நமக்கு வந்திருக்கும் வியாதி இன்னதென்றறிந்து அவுடதம் கொடுப்பதற்கும் எவ்வளவோ வித்தியாசமுண்டு.

5. தமிழ் வியாசங்கள் எழுதும் போது ஆங்கிலப் பழமொழிகளை இடையிடையே ஆபரணமாகச் சேர்த்துக் கொள்கிறார்கள். ஆனால், ஆங்கில வியாசம் வரையும் போது மட்டும் இந்தத் தைரியம் வருவதில்லை.

6. துன்பத்தை யடைந்த மனம் இன்பத்தை நாடுகின்றது. ஆனால் இன்பமோ, தான் வரும்போது பின்னாலேயே துன்பத்தை அழைத்து வந்து விட்டு விட்டுச் செல்கிறது.

7. மனதின் சக்தி அபாரமானது; ஆச்சரியமானது. பல வழிகளில் சிதறியோடும் அதை ஒரே இடத்தில் நிலைக்கச் செய்யின், எக்காரியமும் நினைத்தபடி நிறைவேறும்.

8. நன்மை கடல் போலிருப்பினும் கடுகளவு தீமையையே காண முயல்கின்றனர். அணுத்துணையாகக் குற்றம் நிகழினும் பனைத்துணையாய்ப் பாராட்டுகிறார்கள். குற்றங் காண்பதே இப்பரந்த உலகத்தின் சிறந்த செயல் போலும்!

9. அற்ப பிராணியாகிய கொசுவினிடத்தில் மனிதன் வல்லமைசெல்லுவதில்லை. அதனைத் தாத்தவும்மனிதனால் ஆவதில்லை. ஈ யிடமுங் கூட.

10. "ஊர் போனதும் உடனே கடிதம் போடுகிறேன்" என்று புறப்படும்போது கூறுகிறார்கள். அப்பால் ஊரை யடைந்ததும் நம்மை அறவே மறந்து விடுகிறார்கள். அவர்களுக்கு அப்பொழுது நம்முடைய தயவு தேவை யில்லை யென்பதினாலா?

11. கொடுத்த கடனைக் கேட்கப் போனால் பகைத்துக் கொள்ளுகிறார்கள். கேட்காவிட்டாலோ நல்லவனென்று கொண்டாடுகிறார்கள்.

12. சில விஷயங்கள் மனைவியைத் தவிர வேறு யாரிடத்திலும் கூறத்தகாதவையா யிருக்கின்றன. இதை இல்லறவாசிகள் அனுபவமாக உணர்ந்திருக்கலாம். த. கு. சங்கரலிங்கம்.




1. அலாரம் கெடியாரம் (Alarm Clock) முதன் முதலில் தோன்றியது 1420ஆல். அதன் சொந்தக்காரன் மிலான் தேயத்தின் மந்திராலோசனைச் சபையின் அங்கத்தினராம். ஒரு குறித்த மணியில் அவருடைய கடியாரம் மணி அடிக்குமாம். அதே சமயத்தில் ஒரு ஊதுக்குவத்தி எரிய ஆரம்பிக்குமாம்.

2. காற்று அமைதியாக இருக்கும்போது நிமிடமொன்றுக்கு 1200-கெஜங்கள் வீதம் புரு பறக்கிறதாம். காற்று சற்று வேகமாக இருப்பின் ஒரு நிமிடத்திற்கு 1900 கெஜங்கள் வீதம் பறக்குமாம்.

3. மாடிரிட்டிலுள்ள எஸ்கியூரியல் என்பதே ஐரோப்பாவிலுள்ள அரண்மனைகளுள் பெரியதாம். அவ்வரண்மனையிலுள்ள அளவு முதலியவைகளைச் சுற்றிப்பார்க்க நான்கு நாட்கள் பிடிக்குமாம். அதிலுள்ளவற்றைப் பார்ப்பதற்கு 120-மைல்கள் நடக்கவேண்டாம்.

4. 14-வது நூற்றாண்டில் முதன் முதலில் குண்டூசியைக்கண்டு பிடித்தபோது, அதைச் செய்பவரை ஜனவரி மாதத்தின் முதல் இரண்டு நாட்களிலே தான் அவைகளை விற்க அனுமதி தந்திருந்தார்களாம். அந்த நாட்களில் அவைகளை வாங்குவதற்காகப் பெண்கள் கூட்டமாகக் கூடுவார்களாம்.

5. ஆரம்ப காலங்களில் இரயில் ஸ்டேஷன்களில் கைகாட்டி மரங்கள் கிடையாதாம். இரயிலை ஓட்டுபவர்கள் ஒரே லயினில் சந்திக்க நேரிட்டுவிட்டால் அவர்களே பேசித் தீர்மானிக்கவேண்டுமாம். பிறகு ஒரு ஸ்டேஷனுக்கும் மற்றொரு ஸ்டேஷனுக்கும் மத்தியில் ஒரு ஸ்தம்பம் நடப்பட்டதாம். அந்த ஸ்தம்பத்தைக் கடந்து எவன் இரயிலை செலுத்திக் கொண்டு வந்துவிடுகிறானோ அவனே மேலும் தொடர்ந்துபோக வேண்டுமாம். பின்பு வந்தவன் பின்னாலே திரும்பிச் செல்லவேண்டுமாம்.

6. மேல் நாட்டாருக்குள் முதன் முதலில் வெண்மையான விவாக உடுப்பை உடுத்திய மணப்பெண் குயின் மேரிஸ்டுவர்ட். (Queen Mary Stuart.) அவள் இவ்வழக்கத்தைப் புகுத்தியது 1588-ல் பிரான்ஸ் தேயத்து அரசனை இரண்டாம் பிரான்விஸ்ஸை விவாகம் செய்து கொண்ட போதாம். ஆனால், அவ்வழக்கத்தைப் பதினேழாம் நூற்றாண்டு வரையில் அவ்வளவாக அநுஷ்டிக்கவில்லையாம்.

7. 'டெய்லி மெயில்' (The Daily Mail) என்ற பத்திரிகை உலகத்தில் மிக்க கடமாட்ட முடையதாம். அது ஒரு நாளைக்கு 2,000,000 பிரதிகள் விற்பனையாகிறதாம். லண்டனிலுள்ள அதனுடைய புதிய கட்டிடம் உலகத்தில் பார்க்கத் தகுந்தவைகளுள் ஒன்றாம்.

8. பிரான் இண்டோ சைனாவில் நாய்களைச் சுயேச்சையாய் திரியும்படி விட்டுவிட்டு, பூனைகளைச் சங்கிலியால் கட்டுகிறார்கள். அத்தேயத்தில் பெண்கள் நெஜார் அணிந்துகொள்கிறார்களாம். ஆண்கள் பாவாடை கட்டிக் கொள்கிறார்களாம். குழந்தைகளுக்குப் பெயர் தருவதற்குப் பதில் நம்பர் தருகிறார்களாம். P. G. குலசேகரன்.




# 'கொன்றை வேந்தன்' பிரலங்கம் !



## விகடன் நீள நினைத்துப் பார்த்தேன்!

புஸ்தகக் கல்வி டஸ்தகத்தோடே! புவியில் தான் நடக்கிற தினுசோ இன்னொரு வழியோடே! 'நல்லா பாடியிருக்கிறாரு' நல்லா எழுதியிருக்கிறாரு என்று மெச்சிக் கொள்வதே தவிர, அதிற் கண்ட நல்வழிகளை உச்சிமேல் வைத்து நடந்து கொள்ளுகிற பக்குவ புத்தியே காணோம்! படிப்பது திருவாய் மொழி! இடிப்பது பெருமான் கோயில்! கற்பது ஒரு விதம்; நடப்பது வேறொருவிதம்! நல்ல நீதிகள் புஸ்தகத்திலிருக்கிறது தான்; ஆனால், உலகப்போக்கு அந்த நீதி வழியில் போவதாயில்லையே! உதாரணமாக, ஔவையார் பாடிய "கொன்றை வேந்தன்" என்பதில் கொஞ்சம் விகடன் எடுத்துச் சொல்லுகிறேன். நீங்களும் சற்றே மெல்லுங்கள்! ஃ

1. அன்னையும் பிதாவும் முன் அறி தெய்வம் :—முன்னே அறிந்த இந்தத் தெய்வங்கள்தான் பிறகு மனம் மாறிப்போகிறார்கள்! மருகித்து வேஷத்தில தாய் மாறுகிறாள்! பெற்ற தாய் போனால் பெற்ற அப்பன் சிற்றப்பனாகிறான். இளையாளின் குழந்தை கட்கே எல்லாச் சொத்துக்களையும் எழுதிவைத்து மூத்தாளின் மகனை வஞ்சிக்கிறான்! ஃ

2. ஆலயந் தொழுவது சாலவும் நன்று :—கோயிலுக்குப் போகிறவர்கள் கடவுளைத் தொழுவது கொஞ்சந் தான். தங்களின் ஆசைகளையும், இச்சைகளையும் தொழுவதுதான் அதிகம். ஒரு கோயிலின் பேரைச் சொல்லிக்கொண்டு நடக்கிற வியாபாரங்கள் கொஞ்சமா? ஃ

3. இல்லறம் அல்லது நல்லற மன்று :-கல்யாணம் செய்துகொண்டு பார்த்தால் இந்த இல்லற—நல்லறத்தின் பாடு தெரியும்! புசிப்புக்கே வழியில்லை, வேலையும் கிடைக்கவில்லை! எவ்வளவு வாங்கிப் போட்டாலும் போதவில்லை! உள்ள கடனோ தீரவில்லை! வருகிற விருந்துக்குங் குறைவில்லை! கையிலே காசுமில்லை! குழந்தைகள் பெறுவதிலும் குறைவில்லை! காப்பாற்றவோ திக்குஇல்லை! என்ன இல்லறமோ! என்ன சுகமோ! கவலையும் திகைப்பு தான்!

---

வேண்டுமென்றே திமிர் பிடித்துக் கலகத்திற்கு நிற்பாரிடம் எவ்வளவு தான் விலகி நின்றாலும் சமாதானமாகப் போக வழி ஏற்படுவதில்லை.

4. ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர் :–(தேட்டை—பொருளை) பிறருக்குக் கொடுக்காத பொருளைக் கள்வர் அபகரிப்பார்களாம்! இது ஏமாற்றிப் பிடுங்குவோர் ஆள் ஏமாறுதபோது சொல்லும் வார்த்தை! பிறருக்குக் கொடுத்து விட்டபொருள் பின்னொரு காலத்தில் தனக்கு அவசியப்படும்போது, அந்தப் பிறர் கொடுப்பார்களா? அது ஏது? கொடுத்து ஏமாறியவன் இளிச்சவாயன் தான்!

ஃ

5. உண்டி சுருங்குதல் பெண்டிர்க்கழகு :—இந்த உண்டி சுருங்கும் அழகைப் பெண்களுக்கு வைத்து விட்டு, இப்போது ஆண் தெய்வங்கள் காபி ஹோட்டலில் நன்றாகத்தின்று ருசி பார்க்கிறார்கள்! இந்தப் புருஷர்கள் எப்பொழுது வீட்டிற்கு வெளியே உண்பதைக் குறைக்கிறார்களோ அப்பொழுதுதான் குடும்பத்திற்கு க்ஷேமம்! நாலு காசும் மிஞ்சும்! ஒரு நகையும் வீட்டுக்குச் செய்யலாம்!

ஃ

6. ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும் :—தானே வலியப்போய் பகைக்கவில்லையே! எப்படியோ ஒரு பகை எவ்விதமோ முளைத்துக்கொள்கிறது! தான் சமாதானமாய்ப் போனாலுங்கூட எவ்விதமோ ஒரு சண்டை உண்டாய் விடுகிறது! பதிலுக்குப் பதில் பகைக்கத்தான் நேருகிறது! குடும்ப ஒற்றுமையும் வேருடன் கெடுகிறது! இதைச் சரிப்படுத்துகிற அநுபவ வழி தான் தெரியவில்லை!

ஃ

7. எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும் :—எண்ணையும் எழுத்தையும் கொஞ்சம் படித்தவன் ஏதாவது கைத்தொழில் வர்த்தகம் வழியே உயர்ந்து போகிறான்! முழுப்பாடம் படித்தவனோ வேலை கிடைக்காமல் மூலையில் உட்கார்ந்து முழிக்கிறான்!

ஃ

8. ஏவாமக்கள் மூவா மருந்து:—(மூவா மருந்து—கெடாத மருந்து; அதாவது அமிர்தம்.) பெற்றோர் இதைச் செய்யென்று கட்டளை யிடுவதற்கு முன்னே அந்தக் குறிப்பறிந்து செய்கிற பிள்ளைகள் தேவாமிர்தத்துக்கு ஒப்பானவர்களென்று இதன் பொருள்! அந்த உயில் பத்திரம் எழுதியதை அண்ணனுக்குச் சொல்லாதே என்னும்போது தம்பியும் அப்படியே செய்கிறான்! தனக்கு ஒரு பெண்ணைப் பெற்றோர் கட்டி விட்டதும், சீக்கிரத்திலேயே வீடு நிறையும்படி நாலைந்து குட்டிகளைப் போட்டு விடுகிறான்! இதுவும் பெற்றோருடைய குறிப்பறிந்து செய்கிற வேலைதானே!

ஃ

9. ஐயம் புகினும் செய்வன செய் :—(ஐயம்—பிச்சை) பிச்சை எடுக்க நேர்ந்த காலத்துங்கூட திரிதல்—உண்ணல்—உறங்கல் முதலிய வேலைகளைச் செய்தபடியே தான் இருக்கிறார்கள். தரித்திர காலத்தில் தான் குழந்தைகளும் அதிகம். செல்வமிருந்தபோது ஒரு குழந்தையுமில்லை! ஃ

10. கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை :—(சொற்றிறம்பாமை—சொல்லுக்குத் தப்பி நடவாமை.) புருஷனின் மனம் ஒரு தினுசு; மனைவியின் மனம் வேறொரு தினுசு. புருஷன் ஒன்று சொல்ல, மனைவிக்கு

---

தனக்கென இரக்கப்படாதார் முன்னிலையில் வாழ்வதினும் அநுதிச்சவமாய் அன்னியநாட்டில் மரணமாதல் நன்று.

வேறொன்றில் பிரீதி, இதில் தப்பி நடவாமை முடிகிறதா? எப்பொழுது, சொல்லுக்கு எதிர் சொல்லாத பெண்களுக்கு விகடன் பெரிய கும்பிடு போடுகிறேன்! ஃ

11. கிட்டாதாயின் வெட்டென மற:—(வெட்டென—சீக்கிரத்திலேயே) கிடைக்காததை நினைக்காமல் யார் மறக்கிறார்கள்? எது கிடைக்காதோ, எது தூரமோ அதன் மேல் தான் அதிகம் கண்போகிறது! எண்ணமெல்லாம் கிடைக்காததின் மீது தான்! ஃ

12. கீழோராயினும் தாழவுரை:-(தாழ—வணக்கமாக) தனக்குக் கீழ்ப்பட்டவர்களைத் தான் வணக்கமாக அழைப்பது எப்போது?—அவர்கள் தன்னை மீறி எதிர்த்துக்கொண்ட சமயத்தில் தான்! ஃ

13. குற்றம் பார்க்கில் சுற்றம் இல்லை:—யார் குற்றம் பார்க்காமலிருக்கிறார்கள்? ஒரு பக்கம் குற்றம் சொல்லுகிறது தான்! இன்னொரு பக்கம் சலிப்புடனே உறவு குலாவுகிறது தான்! ஃ

14. சுற்றத்திற் கழகு சூழ இருத்தல்:—சுற்றத்தார் தன்னைத் தழுவியிருக்கச் செய்து கொள்ள வேணுமாம்! வருகிற சம்பளம் தன் வயிற்றுக்கே சரிகாணோமே! இந்த சுற்றத்திற்கெல்லாம் உபசரிக்க எங்கேபோகிறது? பணம் கொல்லையில் முளைக்கிறதா? இல்லாதவனை எந்தச் சுற்றமும் எட்டிப் பார்ப்பதில்லையே! இல்லாதவன் சுற்றம் சூழ இருக்கிறது எப்படி? ஃ

15. தந்தை சொல்மிக்க மந்திரம் இல்லை:—இது இன்னொருத்திக்குப் புருஷனாகாமல், தன் தாய்க்கு மட்டும் புருஷனாயிருக்கிற காலம் வரையிலும் தான்! ஃ

16. தாயிற் சிறந்தோரு கோயிலுமில்லை:—இது கல்யாணம் ஆகிறதற்கு முன் வரையிலும் தான்! தான் ஒருவன் மட்டுமே குமாரனாயிருக்கும் போதுதான்! தன்னோடு தம்பியோ, அக்கா தங்கையோ பிறந்து விட்டால் தாயின் பிரியம் அந்த இடத்திற்குப் போய்விடுமே! ஃ

17. தூற்றும் பெண்டிர் கூற்றெனத்தகும்:—(கூற்று—யமன்) என்ன தூற்றினாலும், எதிர்த்தாலும் மறுபடியும் அவர்களுடனே தான் வாழ வேண்டியதாக வருகிறது! அது தலைவிதி!! ஃ

18. தோழனோடும் ஏழைமை பேசேல்:—அப்படியானால், தன் அங்கலாய்ப்பைக் குட்டிச்சுவரிடத்திலே சொல்லிக் கதறி முட்டிக் கொள்ள வேணுமாக்கும்! தோழனிடம் சொன்னால் அவன் இன்னும் கேவலம் செய்வான்! குட்டிச் சுவர் தான் சரி! ஃ

19. நீரகம் பொருந்திய ஊரகத் திரு:—நீர்வள முள்ள ஊரில் குடியிருக்க வேண்டுமாம்! வெள்ளம் வந்து வீடு முழுகினாலோ?

ஃ

20. நுண்ணிய கருமமும் எண்ணித்துணி:—எண்ணித் துணிந்த கருமம் தான் இப்போது எங்க விட்டிருக்கிறது. ஃ

---

தங்கள் மதம் சேர்ந்ததும் கடவுளைக் கண்டுவிடலா மென்பவர்கள், தங்கள் மதத்திலேயே பிறப்பெடுத்த பலர் தங்கள் மதநூலைக்கூட அறியாத அவிவேகக்கட்டைகளாக இருப்பதற்கு என்னபதில் சொல்வார்களோ? அவர்களை முதலில் திருத்தி ஞானப் பாலூட்டுகிறதுதானே! அது காணோமே!

**21. நோன்பென்பது கொன்று தின்னாமை** :—இது எட்டுச் சுரைக்காய்! ருசிகண்ட நாக்கு சுமமா இருக்கிறதா? கொன்று தின்னுதவர்களும் பிறரை உயிரோடு வைத்துச் சித்திர வதை செய்கிறார்களே! அது கொலையிலும் மீறிய பாவ மல்லவா?

ஃ

**22. பண்ணிய பயிரில் புண்ணியம் தெரியும்** :—பண்ணிய புண்ணியத்திற்கு ஏமாறிமோசம் போதலும், எவ்வளவோ நல்லது செய்த தனக்கு எல்லோரும் விரோதி யாவதும், அவன் எனக்கு என்ன செய்துவிட்டதென்று தூற்றல் கேட்பதும்தான் லாபம்! ஃ

**23. புலையும் கொலையும் களவும் தவிர்** :—தவர்த்த அண்ணுத்தைகளைத்தான் காணும்!

ஃ

**24. பொல்லாங் கென்பவை எல்லாம் தவிர்** :—பொல்லாங்கைச் செய்வதற்குத்தான் அதிகமாகப் புத்தி போகிறது. இதை மறுப்பதற்குமில்லை! ஃ

**25. மருந்தேயாயினும் விருந்தோடுண்** :—மருந்தை சிறுகுழத்தை கூட உண்ணுதவற்கு ஒப்பாது. ஆனதால் அதை உண்ணும்படிப் பிறரையழைப்பதில் எவ்வித நஷ்டமுமில்லை. எவரும் வரார், வாராதவர்களைத் தான் வலிய அழைத்தல் உலக வழக்கம்!

ஃ

**26, முற்பகல் செய்யிற் பிற்பகல் விளையும்** :—பிற்பகலில் அதாவது பின்னுக்கு நேரப் போவதை முற்பகலில் யார் கவனிக்கிறார்கள்? தங்களால் செய்யக்கூடிய அநியாயம் அக்கிரமம் அத்தனையையும் ஆனமட்டில் (முற்பகலில்) செய்து தீர்த்து விடுகிறார்கள்! ஃ

**27. மூத்தோர் சொல் வார்த்தை அமிர்தம்** :—மூத்தோர் சொல்லி எழுதி வைத்துள்ள நூல்களை விலை கொடுத்து வாங்கி ஆதரிக்கக் காணுமே! ஃ

**28. மேத்தையிற் படுத்தல் நித்திரைக் கழகு** :—கிழிந்த பீற்றல் பாயே கிடைக்கவில்லை. இனி மெத்தைக்கும், மாடிக்கும் எங்கே போகிறது? ஃ

**29. வெள்ளைக்கு இல்லை கள்ளச் சிந்தை** :—இப்படி வெள்ளை மனமாய்க் கிடப்பதினால் கண்டவரை நம்பி ஏமாறவும், தனக்கு எழுதத் தெரிந்த அழகைக் காட்டித் தன் கையெழுத்தைப்போட்டுப் பிறகு சிக்கிக் கொள்ளவும், கண்ணுற் கண்ட சங்கதியை மறைக்கும் புத்தி யில்லாமற் போய் வாய் விட்டுச் சொல்வதில் அதிலே ஒரு கலகம் உண்டாவதும், இப்படியாக வெள்ளை மனம் வெகு பாடு பட்டுத் திண்டாடி நோக நேருகிறது. ஃ

**30. ஒத்த இடத்து நித்திரை கோள்** :—கையிலுள்ள காசுவறண்டு போய் விட்டால், மேடு பள்ளமான எந்த இடமாயிருப்பினும் மனதுக்கு ஒத்ததாய்ச் சரிப்பட்டுப் போய் விடும். கையில் காசுள்ள வரையில் தான் குதிப்பு! தடிப்பு, சண்டை! காசு வற்றி காபிக்குப் பதில் பழய சோறு விழுங்குகையில் எல்லாம் சரியாய் ஒத்துப் போய்விடும். நல்ல நித்திரையும் வரும். ஃ

---

தன்னை நம்பியவர்களிடம் தான் சரிவர நடப்பதில்லை. தான் மற்றவர்களை நம்பி அவர்கள் சரியாக நடக்காவிட்டால் அதை மட்டும் மகா பெரிய குற்றமாகப் பேச முந்திக்கொள்கிறார்கள்.

31. ஓதாதார்க்கில்லை உணர்வோடு வொழுக்கம் :—படிக்காதவர்களுக்கு நல்லறிவும் ஒழுக்கமும் கிடையாதென்பது இதன் பொருள். படிக்காதவர்களை விடப் படித்தவர்களுக்குத்தான் நல்லறிவும் ஒழுக்கமும் குறைவாயிருக்கிறது! சினிமாவில் பலமோசம் களவு கொலைகளை வெகு சாமர்த்தியமாய்ச் செய்வோரெல்லாம் படித்த வகுப்பினர்கள் தான்! படித்த கை தான் லஞ்சம் வாங்குகிறது! படித்த கை தான் தப்புப் பத்திரம் மோச பத்திரம் எழுதச் செய்கிறது! படித்துவிட்டு உத்தியோகமானவர்களிற் பலர் வெகு பேரைப் படாத பாடு படுத்துகிறார்கள்! ஒழுக்கத்தைக் கவனியாமல் பணம் திரட்டுவதையே தற்காலப் படிப்பாளிகள் முக்கியமாய் கவனிப்பதால், படிப்பின் நல்ல நோக்கம் நிறை வேறுவதில்லை! கற்றதுங் கேட்டதும் போக்கிலே போக விடுவோர்தான் அதிகம்! படியாத ஒரு கிராமவாசிக்குள்ள தெய்வபக்தி, படித்த ஒரு பட்டணவாசிக்கு இருக்கக் காணோம்! ஃ

கொன்றை வேந்தனில் 31—வரைக்குமே விகடன் இங்கு குறிப்பிட்டேன்! இனி பாக்கியுள்ளவைகளுக்கு என் நஞ்சான் குஞ்சான்களே அர்த்தம் செய்து கொள்ளும்படி விட்டு விடுகிறேன்! நன்கு படித்தவர்களிற் பலர் வழிதவறியே போகிறார்கள்! உண்மையான நெஞ்சுள்ளவர்களை மற்றவர்கள் மொத்து மொத்து என்று மொத்துகிறார்கள்! இரக்கம் காட்டியவர்களின் தலையிலேயே இடிக்க வருகிறார்கள்! உலகம் தலை கீழாய்க் கிடக்கிறது! படிப்பும் தலை கீழாய்க் கிடக்கிறது! நடத்தை, நல்ல குணம் எல்லாம் வெளி வேஷத்தில் நிற்கிறது! எது எப்படி யிருந்தாலும், இந்த உலகத்தோடுதான் பிறகு ஒட்டி வாழவேண்டியு மிருக்கிறது! வீட்டை விட்டு வெளியில் போய்விட நினைக்கிறவன் அப்படித்தான் போய் விடுவதிலுள்ள ஆயிரம் சஞ்சலங்களை நினைத்துப் பார்த்து அங்கலாய்த்துக் கடைசியில் வீட்டுடனேயே யிருந்து வாழ எண்ணி விடுகிறான்! முன்னே போனாலும் தடை! பின்னே சென்றாலும் தொலையாத உபத்திரவம்! இதன் இடையில் நீதிஞான நூல்களைப் படித்தும், அதன்படித் தான் நடக்க முடியாமைக்காக கண்ணீர் விடுவதும் வேறே! கொன்றை வேந்தனின் போதனை ஒருவிதம்! உலகம் நடப்பதோ இன்னொரு விதம்! என்ன செய்யலாம்! ராம்! ராம்! சுபம்! சு! சுவாஹா!!

---

சிறிய பையனை அரசனாக்கினாலும், ஆளுவது மற்ற நிர்வாகஸ்தராவார். உபதேசிக்கும் குருவின் நிலை அவ்விதமல்ல. அவரே உபதேசியாகவேண்டும்? குருவாயிருந்தவர் கண்மூட, அவர் குமாரனைக் குரு ஸ்தானத்தில் ஏற்றி அச் சிறுவனைக்கொண்டு ஸமாஷ்ரயணைபோன்ற 'சூடு' உபதேசச் சடங்குகளை நடத்துவிக்கின்றனர். இச் சிறிய குட்டிக் குருக்களை நம்பினால் முக்திபெற இயலுமா? இவர்களுக்கு உபதேசம்தான் செய்ய அறிவின் பக்குவமாவதுண்டா?

---

வக்கீலாக இருந்தவரின் பிள்ளை வக்கீலாகாவிட்டாலும் அந்த வக்கீலின் விபவகார வாசனை அந்தப் பிள்ளைக்கும் ஒட்டிக்கொண்டே யிருக்குமாம். இவ்விதமே வைத்தியரின் பிள்ளைக்கும் வைத்திய ஞானவாசனை யடிக்குமாம். சித்திரக்காரன் பிள்ளையும் சிறுவயதிலேயே அழகிய சித்திரங்களைச் சுலபமாகா வரையப் பயின்றுகொண்டுவிடுமாம். இங்ஙனமே ஈன வழக்கங்களி லாழ்ந்தோரின் மக்களும் அந்த ஈனச்செயல்களே படிந்து நிற்பார்! இது உண்மைதானோ




வெள்ளைக் குல்லாக்களான சத்தியாக்கிரக சந்யாசிகளுக்கு இருக்கிற அத்தனை மதிப்புகளுக்கு இல்லையே யென்று காவிவேஷ்டி சந்நியாசிகள் கண்ணீர் விட்டார்களாம்!

ஃ

உத்தியோகத்திலிருந்து மேலதிகாரிகள் தன்னை விலக்குவதற்கு முன்னால், வியாதி எத்தனையோ முறை தன்னை விலக்கிவிடுகிறதாம்!

உத்தியோக நாற்காலியிலிருந்து சிடுசிடு என்று படுவோரை, வந்த காரியத்தை முடித்துக்கொண்டு நழுவுவோர் அந்த ஒரு நிமிஷத்துக்கு மட்டும்தான் மனுஷராக மதிக்கிறார்களாம்! ஃ

தன்னைத் தேடிக்கொண்டு ஓட்டு பெற முனிசிபல் சேர்மனும் கௌன்ஸிலரும் தன் வீட்டு வாசலுக்கு வருவது ஒருகாலம்! தான் ஒரு சங்கதிக்காக அவர்களின் தடபுடல் வாசலுக்குச் சென்று காத்து நிற்பதும் ஒரு காலம்! ஃ

ஆபாஸத்தை மறைத்து அழகுபடுத்த எவர் தெரிந்திருக்கிறார்களோ, அவர்களே ஒரு பெரிய உலக வசியக்காரர்களாம்! ஃ

தனக்கு ஆபத்து வந்துவிட்டபோதுதான் வைத்தியருக்கும் வக்கீலுக்கும் கோடி கும்பிடு போடுவார்களாம். அதற்கு முன்பு அவர்களைப்பற்றிச் சிறிதும் நினைக்கிறதே கிடையாதாம்! ஃ

இரு கால்களையும் தலைக்குமேல் வைத்துச் சேர்த்துக் கும்பிடு போடவாராததேன் என்றதற்கு விகடன் அந்த வேலை கைகளுக்குமட்டுந்தான் என்றானாம்! ஃ

அவனவன் கோணல் வழியில் நுழைவது பின்னுக்கு வருகிற அழிவு காலத்துக்குத் தக்கபடி யிருக்குமாம்!

ஃ

எல்லாம் தெரிந்தவன்தான் ஒரு முக்கிய சங்கதியில் முழு முட்டாளாவானாம்! ஃ

பாழாய்க் கிடந்த இடத்தில் மண் சுவரெடுத்துக் கூரையிட்டு ஒரு வீடாக்கிவிட்டார்களே யென்று ஒருவன் வாயைத் திறந்தபோது, அந்த வீட்டிலே திருப்தியும் சந்தோஷமுமுண்டானால் அதுதான் பெரிய அரண்மனை வாழ்வு என்று விகடன் கூறினானாம்! ஃ

அவனுக்குப் போட்ட பட்டுக் குல்லா இவனுக்கே பிறகு திரும்பி வருமாம்! ஃ

தங்கள் வாழ்வு கெடுவதற்குப் பிறருடைய வாழ்வைக் கெடுத்தால் போதுமாம்! ஃ

வலியச் சென்று உறவு பிடித்து ஊரெங்கும் தன்னைத் தெரிந்த மனுஷ்யனாக்கிக் கொண்டவனுக்கு எந்தக் காரியமும் சுலபத்தில் முடியுமாம்!

ஃ

வாங்குவது ஓட்டைப் பவுண்டன்பேனா! அதற்கு மைபோடுவதும் இளிச்சவாயனிடம் இலவசத்திலாம்! ஃ

இவ்வுலகில் எதெது விஷம் என்று விகடனைக் கேட்டதற்கு—கல்வியறிவில்லாதவனுக்கு சாஸ்திரம் விஷம், அஜீர்ண ரோகஸ்தனுக்குப் புசிப்பு விஷம், தரித்திரனுக்கு நாலு பேரைக் காண்பது விஷம், கிழவனுக்குப் பெண்கள் விஷம் என்றானாம்!

ஃ

சாகிற தருணத்திலுள்ளோரின் வீட்டிற்குத் தவறி வந்து விட்டால், பிறகு அங்கே இருக்க வேண்டிய தொல்லை நேருமென்று சொல்லாமலே கம்பி நீட்டி விடவேண்டுமாம்

# “ அமிர்த குணபோதினி ”

## பிரஜோத்பத்தி வருஷத்திய புரட்டாசி மாத பஞ்சாங்கம்.

| யோகம் | இங் | தமிழ் | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| சி-பி | 17 | 1 | வி | ஷஷ் 24-22, அநு 41-7, சம்பா ஷஷ்டி, ஷஷ்டீ விர [தம், திருப்பதி கருடன். |
| ம-அ | 18 | 2 | வெ | ஸப் 21-17, கேட் 40-17, திதித்வயம், தூர்வாஷ்டமி. |
| சி | 19 | கன்யாஞா (5-4) 3 | ச | அஷ் 19-53, மூல 41-10, ஜ்யேஷ்டாஷ்டமி, திருச் [செங்கோடு பார்வதி தேவியார் இடப்பாக தவநிலே. |
| சி-அ | 20 | 4 | ஞா | நவ 20-12, பூரா43-12, நந்தநவமி, திருப்பதி ரதம். |
| ம-அ | 21 | 5 | தி | தச 22-7, உரா 47-45,க்ஷீரவிரதம், திருவகீந்திரபுரதேர். |
| சி | 22 | 6 | செ | ஏகா 25-24,ஶ்ரவ 53-2,ஸர்வைகாதசி, திருப்பதிதீர்த்தம் |
| பி-சி | 23 | 7 | பு | துவா 29-58, அவி 59-23, துலாயனம் 59-41. |
| ம | 24 | 8 | வி | திர 35-28, சத 60-0, ஹநுமத் ஜயந்தி. |
| சி | 25 | 9 | வெ | சசி 41-36, சத 6-27, அனந்த விரதம். [க்ரஹணம். |
| ம-சி | 26 | 10 | ச | ○ 48-4, பூட் 14-3, உமாமஹேஸ்வர விரதம், சந்திர |
| அ | 27 | 11 | ஞா | பிர 54-36, உட் 21-49, மஹாலயமாரம்பம், பாத்திரபத |
| சி | 28 | 12 | தி | துவி 60-0, ரே 29-36. [பகுளம். |
| சி | 29 | 13 | செ | துவி 0-57, அசு 37-1, பிரஹதீ, கௌரீ விரதம். |
| சி-அ | 30 | 14 | பு | திரி 6-52, பர 43-45, மஹாபரணி, சங்கஷ்டசதுர்த்தி. |
| ம-உ | 1 | 15 | வி | சது 11-54, கிரு 49-35, கிருத்திகா விரதம். |
| ம-சி | 2 | 16 | வெ | பஞ் 15-55, ரோ 54-7, சந்திரஷஷ்டி, கரிநாள் |
| சி | 3 | 17 | ச | ஷஷ் 18-25,மிரு57-13 |
| சி | அக்டோபர் 4 | 18 | ஞா | ஸப் 19-23, ஆரு 58-30, மத்தியாஷ்டமி. |
| அ-சி | 5 | 19 | தி | அஷ் 18-31, புந 58-13. |
| சி | 6 | 20 | செ | நவ 15-50, பூச 56-4, தசமிதிதி. |
| சி | 7 | 21 | பு | தச 11-20, ஆயி 52-19, நடராஜரபிஷேகம். |
| அ-சி | 8 | 22 | வி | ஏகா 5-21, உப 52-38, மக 47-12, ஸர்வைகாதசி. |
| சி | 9 | 23 | வெ | திர 49-41, பூர 41-0, அருணந்தி சிவாசாரியார். |
| உ-ம | 10 | 24 | ச | சசி 40-43, உத் 34-3, விஷ சஸ்திர ஹத பிதுருதிதி. |
| அ-சி | 11 | 25 | ஞா | ● 31-25, ஹஸ் 26-44, மஹாலய அமாவாசை அர்த்த [நாரீசுவர தரிசனம், மாதவர் தீர்த்தம். |
| பி-அ | 12 | 26 | தி | பிர 22-14, சித் 13-29, ஆசுவீஜ சுத்தம், திதிதுவயம், [நவராத்திரி பூஜாரம்பம். |
| சி-ம | 13 | 27 | செ | துவி 13-43, ஸ்வா 12-52, பிரீதி துவிதியை. |
| சி-அ | 14 | 28 | பு | திரி 6-7, உப 53-46, விசா 7-10, ஜமாதிஸானி 2உ. |
| சி-பி | 15 | 29 | வி | பஞ் 55-14, அநு 2-48, உபாங்கலலிதாவிரதம், கரிநாள் |
| அ-ம | 16 | 30 | வெ | ஷஷ் 52-29, கேட் 0-7, உப 59-10, சரஸ்வதி ஆவாஹ [னம், ஷஷ்டி திதி, ஷஷ்டீவிரதம். |

| | | | |
|---|---|---|---|
| ரா | | | |
| | 15உக்கு ராசி. | | குரு |
| சனி | | குஜ | ரபுசுகே |